# நெஸில்ஸ் மால்டெட் மில்க்

**வைடமின் 'பி' யுடன் கூடியது**

## வற்றாத சக்தியும் ஆரோக்கியமும் தருவது.

குன்றாத மகிழ்ச்சியும் சக்தியும் அளிக்கும் தேகாரோக்கியம் எவ்வளவு நேர்த்தியானது! உங்கள் தேகத்தில் போதிய அளவுக்கு வைடமின் 'பி' இருந்தால்தான் அத்தகைய ஆரோக்கியத்தை அனுபவிக்கலாம். இந்த வைடமினை அதிகரிப்பதற்கு சுகமான வழி நெஸில்ஸ் மால்டெட் மில்கை தினம் அருந்துவதுதான். சத்துள்ள சுத்தமான பாலும், அதிக வைடமின் 'பி' யும் சேர்ந்த நெஸில்ஸ் மால்டெட் மில்க் நல்ல பாகையாயிருப்பதுடன் புத்துயிரளிக்கும் டானிக்காகவும் விளங்குகிறது.



சிறந்த ஆரோக்கியத்திற்கு நிறைய இந்த முக்கிய வைடமினை நீங்கள் உட்கொள்வது அதிஅவசியமானது.

வைடமின் 'பி' குறைவதனுல் ஏற்படும் கெடுதல்களாவன: அஜீரணம், வளர்ச்சியின்மை, களைப்பு, பசிக்குறைவு, பலவீனங்கள், வயிற்றுக் கோளாறுகள். நெஸில்ஸ் மால்டெட் மில்க்கிலுள்ள வைடமின் சத்து உங்களை இத்தகைய தொல்லைகளிலிருந்து காப்பாற்றி உங்கள் சக்தியையும் அதிகப்படுத்தும்.




M-1

“தேசிய சேமிப்பு இயக்கத்தின் முக்கியத்துவமானது யுத்தம் முடிந்து விட்டதனால் குறைந்து விடவில்லை. தேச நலத்தை முன்னிட்டு, மறித்து வைக்கப்பட்ட செலவிடும் சக்தியை அவசியமாயிராத பொருள்களை வாங்குவதில் விவேகமின்றி சிதறுண்டு போகவிடாமல், ஆக்க வேலைகளுக்காகச் சேமித்து வைப்பது அவசியமாகும். இந்தியாவின் யுத்தப் பிற்கால அபிவிருத்தியில் எளிய மனிதன் திட்டமான சகாயமொன்று செய்யவேண்டியிருக்கிறது. அப்படிப் பட்டவர்கள் நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகள் வாங்குவதன் மூலம் தங்களுக்கும் நாட்டுக்கும் சிறந்த முறையில் உதவி செய்யக்கூடும்.”



ஸர் ஹோமி பி. மோடி, கே. பி. இ., டைரெக்டர், டாடா ஸன்ஸ், லிமிடெட்; மாஜி அங்கத்தினர், வைஸ்ராய் எக்ஸிகியூடிவ் கௌன்ஸில், அக்கிராஸனதிபதி, ஸெண்டிரல் பாங்க் ஆப் இண்டியா, லிமிடெட்.

## பார்த்ததும் தெரிந்து கொள்ளக்கூடிய விஷயங்கள்

1. 12 வருஷ நேஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகளை 5, 10, 50, 100, 500, 1,000 அல்லது 5,000 ரூபாய்களுக்கு வாங்கலாம்.

2. எந்த ஒருவரும் 5,000 ரூபாய்க்குமேல் வாங்க முடியாது. இவை மிகச் சொற்பமானவையாதலால், எல்லோருக்கும் கிடைக்கும்பொருட்டு ஒருவருக்கு அளிக்கும் இந்த மதிப்பு வரையில்தான் கொடுக்கலாமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், இரண்டுபேர் கூட்டாக 10,000 ரூபாய்க்கு வாங்கலாம்.

3. இவைகளின் மதிப்பு 12 வருஷங்களில் 50 சதவீதம் உயருகிறது. வட்டிக்கும் போட்டுவைக்கப்பட்ட ஒவ்வொரு ரூபாயும் ஒன்றரை ரூபாய் ஆகிவிடுகிறது.

4. உரிய காலத்தில் இவைகளிலிருந்து கிடைக்கும் லாபம் 4½ சதவீதம் கூட்டுவட்டியாகும்.

5. சம்பாதிக்கப்பட்ட வட்டிக்கு இன்கம் டாக்ஸ் செலுத்த வேண்டியதில்லை.

6. இவைகளை 2 வருஷங்களுக்குப் பிறகு (5 ரூபாய் ஸெர்டிபிகேட்டுகள் விஷயத்தில் 18 மாதங்களுக்குப் பிறகு) ரொக்கமாக மாற்றிக்கொள்ளலாம்; ஆனால், நீ இவைகளை முழு காலம் முழுவதும் வட்டிக்கு விட்டுவைத்திருந்தால் உமக்கு நல்ல லாபம் கிடைக்கும்.

7. சிறு தொகைகளைச் சேர்த்து வைப்பவர்கள் 1 ரூபாய், 8 அணா அல்லது 4 அணாவுக்கு ஸேவிங்ஸ் ஸ்டாம்பு[கள்] வாங்கலாம். சேர்க்கப்பட்ட ஸ்டாம்புகளின் மதி[ப்பு] 5 ரூபாயானதும், அவைகளைக் கொடுத்துவிட்டு அவைக[ளு]க்குப் பதிலாக ஒரு ஸெர்டிபிகேட் பெற்றுக்கொள்ளலா[ம்].

8. இந்த ஸெர்டிபிகேட்டுகள், ஸ்டாம்புகள் ஆகிய இ[வை] ...டையும் தபாலாபீஸுகளிலாவது கவர்ன்மெண்டா[ல்] நியமிக்கப்பட்ட அதிகாரம்பெற்ற ஏஜெண்டுகளிடமா[வது] ஸேவிங்ஸ் பீரோக்களிலாவது பெற்றுக்கொள்ளலாம்.

உமது பணத்திலிருந்து 50 சதவீதம் லாபம் கிடைக்கும்படிச் செய்துகொள்ளவும்.

# நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகள் வாங்கவு[ம்]

# புன்னகைக்கேற்ற ருசி



# ப்ளாண்டர்ஸ் டீ

சாந்தி ப்ளாண்டர்ஸ் ஸ்பிரிங்டேல் பச்சை லேபில் டீயை உபயோகித்திருக்கிறாள். அதனால் அவளுக்கு அதன் மனோஹரமான மணம் தெரியும்.

நீலகிரியில் 6,000 அடி உயரத்துக்கு மேல் வளர்க்கப்பட்டு, தேர்ச்சி பெற்ற ஐரோப்பியர்களின் மேற்பார்வையில் பதப்படுத்திய 'பச்சை லேபிள்' டீ மிகவும் நற்சுவை ருசியை விரும்புகிறவர்களுக்கும் திருப்தியை அளிக்கும். அதன் உயர்ந்த ரகத்தையும் மனோஹரமான வாசனையையும் நீங்கள் எப்பொழுதும் நம்பலாம்.

ப்ளாண்டர்ஸ் பச்சை லேபிள் டீ அளியுங்கள்.

அது உயரத்தில்
வளர்க்கப்பட்டது




**தி ப்ளாண்டர்ஸ் கம்பெனி லிட்.,**
குன்னூர், நீலகிரி, தென் இந்தியா.

PR-4 TM




மலர் 5 இதழ் 39 | 1946 மே 5 | வியஹ சித்திரை 23



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

சாதாரணமாக, சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் பெயர்கள் பத்திரிகைகளில் அடிக்கடி அடிபடுவதில்லை; பிரதான இடங்களிலும் காணப்படுவதில்லை. 'உத்தியோக மாற்றம்' என்ற தலைப்பிலோ, அல்லது கோர்ட்டு விவகாரங்களிலோதான் காணப்படும்.

இந்த வழக்கத்துக்கு மாறாகச் சமீப காலத்தில் ஸர் எஸ். வி. ராமமூர்த்தி ஐ. ஸி. எஸ். அவர்களின் பெயர் சில தினங்களாகப் பத்திரிகைகளில் பிரபலமாக வெளியாகி வந்தது.

தென்னிந்தியாவைப் பஞ்ச விபத்திலிருந்து காப்பாற்றுவதற்காக ஸர் எஸ். வி. ராமமூர்த்தி அமெரிக்காவுக்குத் தூது சென்றதும், மற்றும் பல பிரம்மப் பிரயத்தனங்கள் செய்ததும் அவருடைய பெயர் பிரபலப்பட்டதற்கு முக்கிய காரணமாகும். கோதாவரி நதியில் பிரம்மாண்ட அணை கட்டி நாட்டில் பஞ்சமே இல்லாமல் செய்து விடுவதற்காக அவர் வெளியிட்ட திட்டமும் சமீபத்தில் அவருக்குப் பிரபலத்தை அளித்தது.




தேசம் அன்னிய ஆட்சியில் இருந்த வரையில் பொது மக்கள் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் எல்லாரையும் பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தோடு சேர்த்து எண்ணுவது வழக்கமாயிருந்தது. ஆனால் அப்படிப்பட்ட அரசாங்க உத்தியோகஸ்தர்களுக்குள்ளேயும் எப்போதும் தேச நன்மையைக் கருத்தில் கொண்டு காரியம் செய்து வந்தவர்களும் சிலர் உண்டு. அவர்களில் ஸர் எஸ். வி. ராமமூர்த்தியும் ஒருவர் ஆவர்.

ஆந்திர நாடு தந்த அரிய புதல்வர்களில் ஒருவரான ஸர் எஸ். வி. ராமமூர்த்தி இம்மாகாணத்தின் சிறந்த அறிவாளிகளில் ஒருவர்; கவிதை மேதாவி; கலை ரஸிகர்; உயர்ந்த வாழ்க்கை இலட்சியங்கள் படைத்தவர்; நேர்மையும் உறுதியும் சுதந்திர புத்தியும் கொண்டவர். ஜில்லா கலெக்டராயிருந்த காலத்திலேயே அவர் அவ்வப்போது நிகழ்த்திய பிரசங்கங்களில் உயர்ந்த இலட்சியங்களும் கவிதை ஆர்வமும் ரஸிகத் தன்மையும் ததும்புவது வழக்கம்.

பிரதான உத்தியோக வர்க்கத்தில் ஒருவர் அடையக் கூடிய மிகப் பெரிய பதவியை ஸர் எஸ். வி. ராமமூர்த்தி அடைந்திருந்தார்; அதாவது சென்ற வாரத்துடன் சமாப்தியான அட்வைஸர் கவர்ன்மெண்டில் அட்வைஸர் பதவி வகித்திருந்தார். சென்னை மாகாணம் இந்த வருஷத்தில் பஞ்சத்தின் பயங்கரத்திலிருந்து தப்பிப் பிழைக்குமானால் அதற்குரிய பெருமையில் பெரும் பகுதி ஸர் எஸ். வி. ராமமூர்த்தி முன் யோசனையுடன் செய்த முயற்சிகளுக்கே உரியதாகும்.

சென்னை மாகாணத்தில் ஏற்பட்டிருக்கும் புதிய காங்கிரஸ் மந்திரி சபை ஆட்சியில் ஸர் எஸ். வி. ராமமூர்த்தி அரசாங்கத்தின் 'சீப் செக்ரடரி' பதவி வகிப்பார் என்று அறிகிறோம். புது மந்திரி சபைக்கு இது ஒரு பெரிய அனுகூலம் என்பதில் சந்தேகமில்லை.




மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 39

# என்ன சேதி?

## சின்ன சந்தேகம்

இந்தியாவுக்கு உதவி செய்ய அமெரிக்கா ரொம்ப ஆவலாயிருக்கிறது.

இந்தியப் பஞ்சத்தைத் தவிர்ப்பதற்காக ஜனாதிபதி ட்ரூமனும் ஹூவரும் லகார்டியாவும் ஸ்டிம்ஸனும் ஹல்லும் ஜேம்ஸ் பைர்னஸூம், ஹெர்பர்ட் லெஹ்மனும் — ஏன் அமெரிக்க மக்கள் எல்லோருமே துடி துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஆனால், அந்த ஆவலும் துடிப்பும் அளவு கடந்த விருப்பமும் நிறைவேறுவதற்கு இடையூறாக நடுவிலே ஒரு சின்ன சந்தேகம் வந்து நின்றது.

அந்தப் பாழாய்ப் போன சின்ன சந்தேகம் என்னவென்றால், இப்போது இந்தியாவுக்குப் பஞ்சம் வந்திருப்பது உண்மையா? இல்லையா என்பதே யாகும்!

இந்த சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்வதற்காக அமெரிக்க மாஜி பிரஸிடெண்ட் ஹூவர் நேரில் இந்தியாவுக்கு வந்திருந்தார்.

அந்தப் புண்ணிய புருஷரை ஒரு பத்திரிகை நிருபர் பேட்டி கண்டு, "இப்போது இந்தியாவிலே பஞ்சம் வந்து விட்டதா, இல்லையா?" என்று கேட்டதற்கு, அவர் கண்களை அகல உருட்டி விழித்துப் பார்த்து, "மொத்தமாக ஆயிரக் கணக்கானவர்கள் செத்தால்தான் பஞ்சம் வந்ததாக ஒப்புக் கொள்ளலாம். இந்தியா இன்னும் அந்த நிலைமைக்கு வரவில்லை" என்றாராம்.

ஆகவே இந்தியாவிலே பஞ்சம் வந்ததாக அமெரிக்கர்கள் ஒப்புக்கொள்ள வேண்டுமானால், ஆயிரக் கணக்கானவர்கள் இந்திய வீடுகளிலும் வாசல்களிலும் தெருக்களிலும் இறந்து கிடக்க வேண்டும் என்பதாக ஆகிறது அல்லவா?

அந்த மாதிரியான நிலைமை ஏற்படாததாலேயே அமெரிக்கர்கள் நமக்கு உதவி செய்யத் தயங்குகிறார்கள் என்பதும் ஸ்பஷ்டமாக விளங்குகிறது அல்லவா?

அமெரிக்கா இருக்கும் திக்கைப் பார்த்து ஒரு நமஸ்காரம் பண்ணுகிறோம்.

ஜனாதிபதி ஹூவருக்கு ஒரு தண்டம் சமர்ப்பிக்கிறோம்.

அமெரிக்காவின் உதவியும் வேண்டாம். அவர்கள் நினைப்பதைப் போன்ற பஞ்சமும் இந்தியாவுக்கு வர வேண்டாம்.

## பேஷான யோசனை!

மற்றொரு மகா யுத்தம் வராமல் தடுப்பதற்காக அமெரிக்கா ஓர் அற்புதமான வழியைக் கண்டு பிடித்திருக்கிறது.

அதாவது, ஜெர்மனியோ ஜப்பானோ இன்னும் 25 வருஷ காலம் வரை எந்த விதமான இராணுவமோ விமானப் படையோ கடற்படையோ வைத்திருக்கக் கூடாதாம்.

அது மாத்திரம் அல்ல. ஒரு துப்பாக்கியோ தோட்டாவோ கூட வைத்திருக்க அனுமதிக்கப் போவதில்லையாம்.

யோசனை பேஷானது என்பதில் சந்தேகம் இல்லை.

ஜெர்மனியும் ஜப்பானும் உலகத்துக்கு இழைத்த அநியாயத்துக்கும் அக்கிரமத்துக்கும் இது மாத்திரந்தானா செய்யலாம்? இன்னும் என்ன செய்தாலும் தகும்.

உதாரணமாக, இன்னும் 25 வருஷ காலம் வரை ஜெர்மனியிலும் ஜப்பானிலும் குழந்தைகளே பிறக்கக் கூடாது என்றுகூடத் தடை உத்தரவு பிறப்பிக்கலாம்.

ஆனால், இந்த அருமையான திட்டத்தைத் தயாரித்த அமெரிக்கா வேறு ஒரு விஷயத்தையும் கவனித்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!

மற்றொரு மகா யுத்தம் ஆரம்பமாவதாயிருந்தால் அதை ஜெர்மனியோ ஜப்பானோதான் ஆரம்பிக்குமா? வேறு நாடுகள் ஏதாவது ஆரம்பிக்கக்கூடாதா?

அப்படி ஆரம்பமானால் அதற்கு மகா யுத்தம் என்ற பெயர் கிடைக்க யோக்கியதை இல்லாமல் போகுமா?

# நிகழ்ச்சிச் சித்திரம்

மற்ற மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரிசபை ஏற்பட்டதற்காகப் பொது ஜனங்க
ஒரே ஆனந்த பரவசமாக இருக்கிறார்கள்.




நம்முடைய மாகாணத்திலும் காங்கிரஸ் மந்திரிசபை ஏற்பட்டிருக்கிறது.
ஆனால்....?



-உம்மன்

பிரதம மந்திரி பிரகாசத்துக்குக் காங்கிரஸ் பெரும் தலைவர்கள் ஆலோசனை சொல்ல மறுத்து விட்டால் என்ன மோசம்? காங்கிரஸிலிருந்து விலக்கப்பட்ட டாக்டர் சுசீல விரைந்தோடி வந்து புத்திமதி சொல்லுவது போதாதா?

மாஜி அமெரிக்கப் பிரஸிடெண்ட் ஹூவர் இந்தியாவுக்கு வந்து போனதின் பயனாக இந்தியப் பஞ்சத்தை ஒழிக்கத் தீவிர முயற்சிகள் நடக்கலாமென்று எதிர்பார்க்கப் படுகிறது.

…வரும் தேசநாட்டு உணவு போர்டும்.



# அப்பா! பிழைத்தோம்!

இராஜபாட்டையில் நேரே போய்க் கொண்டிருந்தவர்கள் திடீரென்று குறுக்கு வழியில் கிளம்பினோம். அதன் பயனாக ஆறரை வருஷ காலம்—78 மாதம்—காட்டிலும் மேட்டிலும் சுற்றித் திரிந்தோம். காலிலே முள்ளும் கல்லும் குத்தி அவஸ்தையடைந்தோம். கடைசியாக, குறுக்கு வழி சுருக்கு வழியல்ல என்பதைக் கண்டுகொண்டு இராஜ பாட்டையில் அந்தப் பழைய இடத்துக்கே திரும்பி வந்து சேர்ந்தோம். அப்பா! பிழைத்தோம்!

ஆம்; சென்னை மாகாண வாசிகள் கூடத்தான் தட்டுத் தடுமாறி அந்தப் பழைய இராஜ பாட்டைக்கே வந்து சேர்ந்திருக்கிறோம். நல்ல வேளை! 93-ஏ ஆட்சி நீடிக்கும்படியான தனிப் பெருமையை நாம் அடையவில்லை. நமது ஆக்டிங் கவர்னர் ஸர் ஹென்ரி நைட் முன் ஜாக்கிரதையாக பிரிட்டிஷ் பார்லிமெண்டில் நிறைவேற்றி வைத்துக்கொண்ட சட்டத்துக்கு அவசியம் ஏற்படாமல் தப்பினோம். ஏப்ரல் மீ 30வ சென்னை மாகாணத்திலும் காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்டு விட்டது! "கொண்டு வா, பைல்களை!" என்று காங்கிரஸ் மந்திரிகள் கட்டளையும் இட்டு விட்டார்கள். ஸெக்ரடேரியட் காரியாலயம் கிடுகிடுத்துக் கொண்டிருக்கிறது.

ஆறரை ஆண்டுகளுக்கு முன்னால் எந்த மந்திரி சபையைக் காங்கிரஸ் வாதிகள் "வேண்டாம்!" என்று விட்டார்களோ, அதே மந்திரி சபைதான். அதிகாரமும் அதே அதிகாரந்தான். கூடவோ குறையவோ இல்லை. முக்கியமாக யுத்த சமயத்தில், நாட்டு மக்களுக்கு எவ்வளவோ நன்மைகள் செய்திருக்கக்கூடிய சந்தர்ப்பத்தில், பிரிட்டிஷாரிடம் அதிகாரத்தை ஒப்படைத்து விட்டு, இப்போது அதைத் திரும்ப வாங்கிக் கொண்டிருக்கிறோம்.

பிரிட்டிஷாரும் தங்களுக்கு மிகவும் அவசியமாயிருந்த யுத்த காலத்தில் அதிகாரங்களைத் தாங்களே வைத்துக் கொண்டிருந்துவிட்டு, யுத்தத்தின் விளைவாக ஏற்படும் சங்கடமான பிரச்னைகளைத் தீர்த்து வைக்கவேண்டிய சமயத்தில் உற்சாகமாகவும் சந்தோஷமாகவும் மாகாண ஆட்சியைத் திருப்பிக் கொடுத்திருக்கிறார்கள். "அப்பா! பிழைத்தோம்!" என்று அவர்களும் பெருமூச்சு விட்டுக்கொண்டிருக்கிறார்கள் என்பதில் சந்தேகமில்லை. நமது ஆக்டிங் கவர்னர் ஸர் ஹென்ரி நைட் துரை அவர்கள் நம்மிடமிருந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் புதிய காங்கிரஸ் மந்திரிகளை ரொம்பவும் பாராட்டி முதுகிலேயும் தட்டிக் கொடுத்திருக்கிறார். அவர் எவ்வளவு தூரம் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார் என்று இதிலிருந்தே ஊகிக்கலாம்.

* * *

ஆறரை வருஷத்து யதேச்சாதிகாரம் ஒருவாறு ஒழிந்து ஜனப்பிரதிநிதிகளின் ஆட்சி வந்திருப்பது பற்றி நாம் அளவற்ற மகிழ்ச்சி அடையவேண்டியதுதான். ஆனால், அந்த மகிழ்ச்சியைக் கெடுக்கும் சந்தர்ப்பம் ஒன்று நேரிட்டிருக்கிறது. துரதிர்ஷ்டவசமாகச் சென்னை மாகாணத்துக்கென்றே ஏற்பட்டிருக்கிறது.

சென்ற இதழில் நாம் எழுதியபோது காங்கிரஸ் பெருந் தலைவர்கள் சென்னை மாகாண விஷயத்தில் என்ன முறையைக் கையாளப் போகிறார்கள் என்று செய்தி திட்டமாக வந்திருக்கவில்லை. இப்போது வந்திருக்கிறது.

ஸ்ரீ பிரகாசம் காரு தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு, "மந்திரி சபை அமைப்பு விஷயமாக நீங்கள் ஏதாவது எனக்குச் சொல்ல வேண்டியது இருக்கிறதா?" என்று தந்தி யடித்துக் கேட்டாராம்.

"தலைவரைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் எங்களுடைய புத்திமதியை நீங்கள் கேட்காதபடியால், இனிமேல் உங்களுக்குப் புத்திமதி சொல்லவே முடியாது. உங்கள் இஷ்டம்போல் எதை வேணுமானாலும் செய்து கொள்ளுங்கள்" என்று காங்கிரஸ் பெருந் தலைவர்கள் சொல்லி விட்டார்களாம்.

இவ்விதமாக நமது புதிய காங்கிரஸ் மந்திரி சபையானது பெரிய தலைவர்களுடன் 'டூ' இட்டுக் கொண்டு, தன் வாழ்நாளைத் தொடங்குகிறது.

மற்ற மாகாணங்களில் எல்லாம் மந்திரி சபைகளுக்குக் காங்கிரஸ் காரியக் கமிட்டியின் ஆதரவும் பக்கபலமும் இருக்கின்றன. நமது மந்திரி சபைக்கு அந்த ஆதரவும் பக்க பலமும்

இல்லை. தங்களுடைய சொந்தக் கையை ஊன்றியே அவர்கள் கரணம் போட்டாக வேண்டும்.

“ஓ! எங்களுக்கு ஒருவருடைய ஆதரவும் பக்க பலமும் வேண்டியதில்லை. நாங்களே எங்கள் காரியங்களைச் செய்து கொள்வோம். அதற்கு வேண்டிய சக்தி எங்களுக்கு இருக்கிறது!” என்று சொல்லி நமது புதிய மந்திரிகள் இன்றைக்குச் சந்தோஷப்படலாம்.

அதாவது, “சுயமரியாதைக்காரர்களும் ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களும் கறுப்புச் சட்டைக்காரர்களும் ஸ்தாபிக்க வேண்டும் என்று சொல்லும் ‘திராவிடஸ்தான்’ இராஜ்யத்தை இதோ நாங்களே ஸ்தாபித்து விட்டோம்!” என்று சொல்லிக் குதூகலமடையலாம்.

ஆனால் இந்தத் ‘திராவிடஸ்தான்’ நிலைமையின் பலாபலன்கள் நாளைக்கு என்ன ஆகும் என்று யோசித்துப் பார்க்க வேண்டும்.

காங்கிரஸ் ஸ்தாபனத்தின் கட்டுப்பாடும், காங்கிரஸினிடம் மக்களுக்குள்ள பக்தியும் சின்னா பின்னமாகிச் சிதறிப் போவதற்குத் தற்போதைய நிலைமை காரணமாகக் கூடும்.

அகில இந்திய ராஷ்டிரபதியின் புத்திமதியை நமது மாகாண ராஷ்டிரபதிகள் இன்று கேட்கவில்லையென்றால், மாகாண ராஷ்டிரபதிகளின் கட்டளைகளை நாளைக்கு ஜில்லா ராஷ்டிரபதிகளும் தாலூகா ராஷ்டிரபதிகளும் கிராம காங்கிரஸ் ராஷ்டிரபதிகளும் புறக்கணிக்கலாமல்லவா?

இன்றைக்குக் காங்கிரஸ் சட்டசபை அங்கத்தினர் தலைவர் தேர்தல் விஷயத்தின் தங்களுடைய சுயேச்சை உரிமையை உபயோகித்துக் கொண்டிருக்கிறார்கள். நாளைக்கு ஜில்லாக்களிலும் தாலூகாக்களிலும் உள்ள காங்கிரஸ்காரர்கள் ஏதாவது தேர்தல் ஏற்படும்போது தங்கள் சுயேச்சை உரிமையை உபயோகப் படுத்தலாம். அடுத்த தேர்தலில் வோட்டர்களும் மேலே இருந்து நியமித்த அபேட்சகரைப் புறக்கணித்துத் தங்களுடைய சொந்த உரிமையை நிலை நாட்டலாம்.

மொத்தத்தில், ரொம்பவும் கெடுதலான பல விபரீதங்களுக்கு ஆஸ்பதமான நிலைமையில் சென்னைக் காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்டிருக்கிறது.

இந்த நிலைமை மாறவேண்டும். சென்னைக் காங்கிரஸ் மந்திரிகள் தங்களுக்கும் காங்கிரஸ் பெருந் தலைவர்களுக்கும் ஏற்பட்டிருக்கும் தகராறைத் தீர்த்துக் கொள்ளவேண்டும். இல்லாத வரையில், புதிய மந்திரி சபைக்குப் பலக்குறைவு உண்டாவதோடு தேச நன்மைக்குப் பாதகம் ஏற்படும்.

* * *

மற்ற மாகாணங்களில் எல்லாம் முன்னிருந்த மந்திரிகளின் எண்ணிக்கையை அப்படியே வைத்திருக்கிறார்கள். சென்னையில் மட்டும் மூன்று மந்திரிகள் அதிகமாகி யிருக்கிறார்கள்.

ஸ்ரீ பிரகாசம்காருவின் தலைமையை எதிர்த்து வோட்டுப் போட்டவர்களின் உத்தியோக ஆசையைத் திருப்தி செய்து சரிக்கட்டுவதற்காகவே இம் மாதிரி அதிகமாக்கி யிருக்க வேண்டும்.

காரியக் கமிட்டியின் ஆதரவு இல்லாமற் போனதின் பலவீனம் இதிலேயே வெளியாகிறது.

மந்திரிகளுக்கு இலாகாக்களைப் பிரித்துக் கொடுத்திருப்பதைப் பார்த்தால், சற்று வேடிக்கையா யிருக்கிறது. இரண்டு பேருக்கு ஏராளமான இலாகாக்களும் சிலருக்கு ஒவ்வொரு இலாகாவும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதைப் பார்க்கும் போது உத்தியோகம் எப்படியும் கொடுக்க வேண்டி யிருப்பதால் ஏதாவது இலாகாவைக் கொடுத்தாக வேண்டுமே யென்று கொடுத்திருப்பதாகத் தோன்றுகிறது.

பிரதம மந்திரி பிரகாசம் உணவு, பொக்கிஷம், போலீஸ், உள்நாட்டு நிர்வாகம் ஆகிய இலாகாக்களைத் தாமே வைத்துக் கொண்டிருக்கிறார்.

இந்தப் பஞ்ச காலத்தில் பிரதம மந்திரி பிரகாசம் உணவு எடுத்துக் கொண்டது பொருத்தமான காரியம். ஆனால் உணவு விஷயம் ஒன்றை அவர் திருப்திகரமாகத் தீர்த்து வைத்தால் அதுவே பெரிய காரியமாகும். அதற்கே அவருடைய பூரண கவனத்தையும் முயற்சியையும் செலவிட வேண்டியதா யிருக்கும்.

பொக்கிஷம், போலீஸ் மற்ற இலாகாக்களைப் புதிதாக நியமிக்கப்படப் போகும் மந்திரிகளிடம் ஸ்ரீ பிரகாசம் கொடுத்து விடுவார் என்று நம்புகிறோம்.

* * *

பெரிய இடத்துத் தகராறைத் தீர்த்துக்கொண்டு பொது மக்களின் உற்சாகமான ஆதரவையும் பெற வேண்டுமானால், புதிய மந்திரிகள் விறு விறுவென்று பல காரியங்களைச் செய்தாக வேண்டும். பூரண மதுவிலக்கு, நிலவரி ரத்து, ஆலயத் திறப்பு முதலிய பெரிய திட்டங்களைத் தவிர, புதிய

மந்திரிகள் அவசரமாகக் கவனித்து முடிவு செய்ய வேண்டிய சில்லறைப் பிரச்னைகள் — ஆனால் முக்கியமான பிரச்னைகள் — பல காத்துக் கொண்டிருக்கின்றன.

எல்லாவற்றுக்கும் முதலில் அரசியல் கைதிகளின் விடுதலை விஷயம்.

நல்ல வேளையாக நமது மாகாணத்தில் அட்வைஸரி கவர்ன்மெண்டாரே இந்த வேலையை ஆரம்பித்துப் பெரும்பாலானவர்களை விடுதலை செய்து விட்டார்கள். பாக்கி யுள்ளவர்களையும் — ஸ்ரீ காசிராஜன், ராஜகோபாலன் உள்பட — விடுதலை செய்யவேண்டும்.

* * *

புது மந்திரிகள் உடனே முடிவு செய்ய வேண்டிய பிரச்னைகளில் இன்னொன்று அவர்களுடைய சம்பள விஷயம்.

ஏழை இந்தியாவில் எந்த அரசாங்க உத்தியோகஸ்தருக்கும் ரூ. 500-க்கு மேல் சம்பளம் உதவாது என்று கராச்சி காங்கிரஸ் தீர்மானத்தை யொட்டிச் சென்ற தடவை காங்கிரஸ் மந்திரிகளின் சம்பளம் மாதம் ரூ. 500 என்று நிர்மாணிக்கப்பட்டது.

தற்போதுள்ள பொருளாதார நிலைமையில் 500 ரூபாய் சம்பளம் போதாதென்று கருதப்படுகிறது.

பம்பாய் மாகாணத்தில் மந்திரிகளின் சம்பளம் ரூ. 750 ஆக்கப்படுமென்று தெரிகிறது.

ஆனால் பம்பாயின் நிலைமை வேறு; சென்னையின் நிலைமை வேறு.

மற்ற எந்த மாகாணத்தைக் காட்டிலும் சென்னையில் மந்திரிகளின் தொகை அதிகம். பதின்மூன்று மந்திரிகள் வேறு எந்த மாகாணத்திலும் கிடையாது. பதின்மூன்று மந்திரிகளுக்குப் பதின்மூன்று காரியதரிசிகள் வேறு ஏற்படப் போகிறார்கள். ஆகவே சம்பளத் தொகை ஒரு பெருந் தொகையாகும்.

தற்போதுள்ள நிலைமையில் ரூ. 500 சம்பளத்தில் மந்திரிகள் காலட்சேபம் செய்ய முடியாது என்று ஏற்பட்டால், மற்ற உத்தியோகஸ்தர்களைப் போல் மந்திரிகளும் பஞ்சப்படி பெற்றுக் கொள்வதுதான் சரியே தவிர, சம்பளத்தை உயர்த்துவது உசிதமாகாது. ஆக்கிய சம்பளத்தைப் பிற்பாடு குறைப்பது கஷ்டமாகி விடும்.

மந்திரிகள் தங்களுடைய சம்பளப் பிரச்னையைப்பற்றி ஆலோசிக்கும்போது இன்னும் சிலருடைய சம்பளப் பிரச்னைகளைப் பற்றியும் யோசிக்க வேண்டும்.

கிராம உத்தியோகஸ்தர்களின் சம்பளப் பிரச்னை இப்போது தேச மக்களின் கவனத்தைக் கவர்ந்திருக்கிறது.

தமிழ் நாட்டைச் சேர்ந்த கிராம உத்தியோகஸ்தர்கள் ஆயிரக் கணக்கானவர்கள் தங்கள் உத்தியோகங்களை ராஜிநாமாச் செய்திருக்கிறார்கள்; அல்லது ராஜிநாமாச் செய்யத் தயாரா யிருக்கிறார்கள்.

கிராம உத்தியோகஸ்தர்களின் ராஜிநாமா திடீர் வேலை நிறுத்த வகையைச் சேர்ந்ததல்ல. இது வேலை நிறுத்தமே யல்ல; அடியோடு வேலையை விட்டுவிடவே அவர்கள் முன் வந்திருக்கிறார்கள்.

எத்தனையோ முறையீடுகள், விண்ணப்பங்கள் எல்லாம் எவ்வளவோ காலமாகச் செய்து பார்த்தும் பயனில்லாமல் போனதினால்தான் அவர்கள் இந்தத் தீவிர நடவடிக்கையைக் கைக்கொண்டிருக்கிறார்கள்.

கிராம உத்தியோகஸ்தர்களில் பலர் பரம்பரையாக அந்த உத்தியோகத்தை அடைந்தவர்கள். அப்படி அடைந்து இத்தனை நாளாகப் பார்த்து வந்த உத்தியோகத்தை விடுவது என்பது அவர்களுக்கு இலேசான காரியமல்ல. வேறு வழியில்லை என்று கண்டுதான் இந்தக் கடைசி முறையைக் கையாளுகிறார்கள்.

கிராம உத்தியோகஸ்தர்களின் வேலை ஒரு காலத்தில் கௌரவ வேலையாகக் கருதப்பட்டது. கிராமத்து மிராசுதார்கள் தங்களுடைய சொந்தக் காரியங்களைச் செய்து கொடுப்பதற்காகக் கிராம உத்தியோகஸ்தர்களுக்குச் சன்மானம் அளித்து வந்தார்கள். அதெல்லாம் இப்போது மலையேறி விட்டது.

கிராம உத்தியோகஸ்தர்களின் வேலைகள் ஒன்றுக்கு ஐந்து மடங்கு இப்போது வளர்ந்துபோயிருக்கின்றன.

அவர்களுடைய சம்பளம் மட்டும் அப்படியே இருந்து வருகிறது.

கிராம உத்தியோகஸ்தர்கள் தற்போது செய்யும் வேலையை ஒரு வியாபாரக் கம்பெனியில் செய்தால் நூறு ரூபாய் சம்பளம் பெறலாம்.

அதற்குப் பதிலாகப் பதினைந்து ரூபாய் சம்பளம் வாங்கிக் கொண்டு வேலை செய்கிறார்கள்.

அரசாங்க நிர்வாகத்துக்கும், சகல விதமான முன்னேற்றத் திட்டங்களுக்கும் அடிப்படை கிராம உத்தியோகஸ்தர்கள் தயாரிக்கும் கணக்குகளே யாகும். அவர்கள் செய்யும் வேலைகளுக்குத் திடீரென்று மாற்று ஆட்கள் கண்டு பிடிப்பது எளிதான காரியமல்ல.

புதிய மந்திரி சபை கிராம உத்தியோகஸ்தர்களின் குறைகளை உடனே நிவர்த்தி செய்ய வேண்டும்.

* * *

சம்பள விஷயத்தில் மிக்க அநீதி செய்யப்படும் வர்க்கத்தார் இந்த நாட்டுக்குள்ளே யார் என்று கேட்டால், ஆரம்பப் பாடசாலை ஆசிரியர்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஒரு தேசத்தின் செல்வங்களுக்குள்ளே மிகச் சிறந்த செல்வம் அந்த நாட்டின் குழந்தைகள்தான். சுதந்திரம் அநுபவிக்கும் ஒவ்வொரு நாட்டிலும் குழந்தையின் தேக ஆரோக்கியமும் அறிவு வளர்ச்சியும் கல்விப் பயிற்சியுந்தான் எல்லாவற்றிலும் முக்கியமாகக் கருதப்படுகின்றன. இந்தக் காரியங்களுக்குத்தான் அரசாங்கப் பொக்கிஷத்தின் மீது முதல் உரிமை என்றும் கருதப்படுகிறது. அதாவது குழந்தைகளின் கல்விப் பயிற்சிக்குச் செலவு செய்ததுபோக மிச்ச முள்ள பணந்தான் மற்றக் காரியங்களுக்குச் செலவாகும்.

நமது நாட்டிலோ குழந்தைகளுக்குக் கல்வி கற்பிக்கும் ஆசிரியர்களுக்கு மாதம் 14 ரூபாயும் 18 ரூபாயும் சம்பளம் கொடுக்கப்படுகிறது.

மாதம் பதினாறு ரூபாயில் இந்தக் காலத்தில் ஒருவர் எப்படி வாழ்க்கை நடத்த முடியும்? குடும்பத்தை நடத்த முடியும்?

அத்தகைய சம்பளம் வாங்கும் உபாத்தியாயரால் குழந்தைகளுக்கு என்ன பாடம் சொல்லிக் கொடுக்க முடியும்?

குடும்பக் கவலைகளினாலும் தரித்திரக் கொடுமைகளினாலும் ஏற்படும் கோபத்தைக் குழந்தைகளின் மீது காட்டாமல் இருந்தால், அதுவே பெரிய காரியம்!

சமூகத்திலேயுள்ள மற்ற எல்லாத் தொழில்களைக் காட்டிலும் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதற்குத்தான் அதிக யோக்யதையுள்ளவர்கள் வேண்டும்; திறமைசாலிகள் வேண்டும்; பொறுமைசாலிகள் வேண்டும். அத்தகைய யோக்யதையுடையவர்கள் ஆரம்ப ஆசிரியர்களாக வரவேண்டுமானால் தக்க சன்மானம் ஏற்படுத்த வேண்டும். குடும்பக் கவலையும் ஜீவனக் கவலையும் அவர்களுக்கு இல்லாமற் செய்ய வேண்டும்.

ஏற்கெனவே ஆரம்ப ஆசிரியர்கள் அங்கங்கே அதிக சம்பளத்துக்காகக் கிளர்ச்சி செய்து வருகிறார்கள். கிராம உத்தியோகஸ்தர்களைப்போல் அவர்கள் வேலையை ராஜினாமா செய்யும் வரையில் காங்கிரஸ் மந்திரிகள் காத்திருக்க வேண்டியதில்லை.

பம்பாயில் நடந்தது போல் வேலை நிறுத்தம் செய்யும் வரையிலும் விட்டிருக்க வேண்டியதில்லை.

காங்கிரஸ் மந்திரிகளே உடனே இது விஷயமாக விசாரணை தொடங்கலாம். விசாரணை கூட வேண்டியதில்லை. ஆரம்ப ஆசிரியர்களின் சம்பள விகிதத்தை உடனே இரண்டு மடங்கு ஆக்கிவிடலாம். அதற்குமேலே சம்பளத்தை அதிகமாக்குவது பற்றி வேண்டிய விசாரணைகளைச் சாவகாசமாகச் செய்து கொள்ளலாம்.

* * *

மொத்தத்தில் சென்னைக் காங்கிரஸ் மந்திரிகள் எல்லோரும் அவரவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கும் காரியத்தைத் தீவிரமாக நடத்தி வைக்க வேண்டும். நடத்தி வைத்துப் பொது மக்களிடம் நல்ல பெயர் வாங்கினால், அவர்களுடைய 'திராவிடஸ்தான்' நிலைமையைப் போக்கிக் கொள்வதும் நாளடைவில் சாத்தியமாகலாம்.

# சிவகாமியின்





கல்கி

அத்தியாயம் 38

## சிவகாமியின் ஓலை

சேனாதிபதி பரஞ்சோதிக்குச் சிவகாமி அனுப்பியிருந்த ஓலையில் பின்வருமாறு எழுதியிருந்தது:—

"வீர பல்லவ சைன்யத்தின் சேனாதிபதியும் என் அன்புக்குரிய சகோதரருமான பரஞ்சோதியாருக்கு ஆயனர் மகள் சிவகாமி எழுதிக் கொண்டது.

இந்த அபலையை, அநாதையை ஒன்பது வருஷ காலம் தாங்களும் பல்லவ குமாரரும் மறந்து விடாமல் நினைவு வைத்துக் கொண்டிருந்து என் சபதத்தை நிறைவேற்றி வைப்பதற்காகப் படையெடுத்து வந்திருப்பதையறிந்து கொண்டேன். கோட்டைக்கு வடதிசையில் நடந்த பெரும் யுத்தத்தைப் பற்றியும் இங்கே செய்தி வந்திருக்கிறது. அந்த யுத்தத்தில் வாதாபி சக்கரவர்த்தி மாண்டிருக்க வேண்டும் என்று இங்குள்ளவர்கள் சொல்லிக் கொள்ளுகிறார்கள்.

இந்த வாதாபிக் கோட்டையின் காவலரான தளபதி பீமசேனர் என்னை வந்து பார்த்து இந்த ஓலை எழுதும்படி கேட்டுக் கொண்டார். அதன்படி என் மனப்பூர்வமான சம்மதத்துடன் இதை எழுதுகிறேன்.

தாங்களும் பல்லவ குமாரரும் எந்த நோக்கத்துடன் படையெடுத்து வந்தீர்களோ அந்த நோக்கம் நிறைவேறி விட்டது. சளுக்க சைன்யமும் வாதாபி சக்கரவர்த்தியும் நாசமடைந்தார்கள். இத்துடன் யுத்தத்தை நிறுத்தி வாதாபிக் கோட்டையின் சரணாகதியை ஒப்புக் கொள்ளும்படி ரொம்பவும் வேண்டிக் கொள்கிறேன்.

நான் அன்று செய்த சபதத்தைப் பல்லவ குமாரர் அதன்படியே நிறைவேற்ற வேண்டும் என்னும் விருப்பம் இப்போது எனக்கு இல்லை. அதை அப்படியே நிறைவேற்றுவதென்றால், இந்தப் பெரிய நகரத்தின் குற்றமற்ற ஜனங்கள் வீடு வாசல்களை இழந்து சொல்ல முடியாத கஷ்டங்களுக்கு உள்ளாகும்படி நேரிடும். அவர்களை அத்தகைய கொடுமைகளுக்கு உள்ளாக்க நான் பிரியப்படவில்லை. அவ்விதம் செய்வதால் யாருக்கு என்ன பிரயோஜனம்?

ஏற்கெனவே நடந்த யுத்தத்தில் இருதரப்பிலும் ரொம்பவும் உயிர்ச்சேதம் நேர்ந்திருப்பதாகத் தெரிகிறது. என் காரணமாக ஏற்பட்ட இந்த விபரீதப் படுகொலையை நினைத்து ரொம்பவும் வருத்தப் படுகிறேன்.

அருமைச் சகோதரரே! கடந்த ஒன்பது வருஷ காலம் இந்த நகரத்தில் தன்னந் தனியாக நான் வசித்தபோது ஓயாமல் என் மனம் சிந்தனை செய்து கொண்டிருந்தது. பல்லவ குமாரரும் தாங்களும் முன்னொரு தடவை வந்து என்னை அழைத்த சமயம் நான் உங்களுடன் கிளம்பி வராதது எவ்வளவு பெரும் பிசகு என்பதை உணர்ந்து கொண்டேன். என் சபதத்தை நிறைவேற்றிய பிறகுதான் இந்த நகரை விட்டுப் புறப்படுவேன் என்று பிடிவாதம் பிடித்தது எவ்வளவு அறிவீனம் என்பதை உணர்ந்து வருந்தினேன். ஆறு அறிவு படைத்த மனிதர்கள் யுத்தம் என்ற பெயரால் ஒரு

வரை யொருவர் கொன்று கொன்வது எவ்வளவு பைத்தியக்காரச் செயல்?

கடவுளால் சிருஷ்டிக்கப் பட்ட ஜீவன்களை மனிதர்கள் கொல்வது தெய்வ சம்மதமாகுமா? ஒரு சிறு அற்பமான உயிரைக் கூட நம்மால் சிருஷ்டிக்க முடியாமலிருக்கும்போது ஆயிரக்கணக்கான உயிர்களைக் கொல்வது எவ்வளவு பாவமான காரியம்? இதையெல்லாம் நினைத்துப் பார்க்கப் பார்க்க என்னால் இந்தப் பயங்கரமான பெரிய யுத்தம் சேர்ந்து விட்டதே என்று ரொம்பவும் துக்கப்படுகிறேன்.

உலகத்தில் மனிதர்கள் குற்றம் செய்தால், அதற்குத் தண்டனை பணிக்கவோ அல்லது மன்னித்து அருளவோ எல்லாம் அறிந்த இறைவன் இருக்கின்றார். அவர் அன்றி இவ்வுலகில் ஓர் அணுவும் அசையாது என்று பெரியோர் சொல்கின்றனர். அப்படியிருக்க, மனிதர்கள் தங்களையொத்த மற்ற மனிதர்களின் குற்றங்களுக்குத் தண்டனை விதிக்க ஏன் முற்பட வேண்டும்?

சகோதரரே! போனது போகட்டும். இனிமேலாவது இரத்த வெள்ளம் பெருகுவது நிற்கட்டும்.

என்னுடைய மூடப் பிடிவாதத்தினால் உங்களுக்கெல்லாம் நான் கொடுத்த கஷ்டங்களுக்காக என்னை மன்னித்துவிடுங்கள். பல்லவ குமாரரிடம் நான் ரொம்பவும் கேட்டுக் கொண்டதாகச் சொல்லி யுத்தத்தை நிறுத்தச் செய்யுங்கள்.

கோட்டை முற்றுகை ஆரம்பமானதிலிருந்து என்னிடம் இந் நகரவாசிகள் ரொம்பவும் மரியாதை காட்டி வருகிறார்கள். பல்லவ குமாரர் கோட்டைச் சரணாகதியை ஒப்புக் கொண்டால், என்னைப் பல்லக்கிலே ஏற்றி மேளதாளத்துடன் அனுப்பி வைக்கச் சித்தமாய் இருக்கிறார்கள். இதையெல்லாம் அவரிடம் தெரியப்படுத்துங்கள்.

உங்கள் எல்லாரையும் பார்க்க வேண்டும் என்று என் உள்ளம் துடிதுடித்துக் கொண்டிருக்கிறது.

இன்று சூரியன் மலைவாயில் இறங்குவதற்கு முன்னால் தங்களையும் பல்லவ குமாரரையும் தரிசிக்கும் பாக்கியம் கிடைக்கும் என்று நம்புகிறேன்.

என் அருமைத் தந்தையின் பாத கமலங்களில் என்னுடைய நமஸ்காரங்களைச் சமர்ப்பிக்கிறேன்."

* * *

**மா**மல்லருடைய குணப் பண்பையும் மனப் போக்கையும் நன்கு அறிந்துள்ள நாம், சிவகாமி தேவியின் மேற்படி ஓலை அவருக்கு ஏன் அத்தனை கோபத்தையும் ஆத்திரத்தையும் உண்டாக்கியது என்பதை ஒருவாறு ஊகிக்கலாம்.

ஓலையைக் கிழிக்கப் போனவரிடம் சேனாபதி "அது என் ஓலை" என்று சொன்னதும், மாமல்லரின் ஆத்திரம் இன்னும் அதிகமாயிற்று. "அப்படியா? இதோ உமது ஓலையை எடுத்துக் கொள்ளும், சேனாபதி! திவ்யமாக எடுத்துக்கொள்ளும். இந்தத் தர்மோபதேச மகா மந்திர ஓலையை நீரே வைத்துக் கொண்டு பூஜை செய்யும்!" என்று சொல்லிக் கொண்டே மாமல்லர் ஓலையை வீசி எறிந்தார்.

சேனாபதி அதைப் பயபக்தியுடனே பொறுக்கி எடுத்துக்கொண்டு கூறினார்: "ஆம், பல்லவேந்திரா! இது எனக்கு மகா மந்திரோபதேச ஓலைதான். திருநாவுக்கரசர் பெருமானிடம் சிவ தீட்சை பெறுவதற்காகக் காஞ்சி நகரத்துக்கு வந்தேன். அந்த பாக்கியம் அன்று கிடைக்கவில்லை. ஆனால் சிவகாமி தேவியிடம் உபதேசம் பெறும் பாக்கியம் இப்போது கிடைத்தது. நான் ஆச்சரியராக அடுத்த ஆயனச் சிற்பியாருடைய குமாரியல்லவா சிவகாமி தேவி!......"

மாமல்லருடைய கோபம் இப்போது வரம்புகளையெல்லாம் கடந்துவிட்டது. சிவகாமி விஷயமாக நாலு பேருக்கு முன்னால் இதுவரை பேசி அறியாதவர், இப்போது அத்தனை பேருக்கும் முன்னால் வெட்ட வெளிச்சமாக ஆங்கார வார்த்தைகளைக் கொட்டினார்.

"சேனாபதி! என் வாழ் நாளில் இரண்டு தவறுகளை நான் செய்திருக்கிறேன். சிற்பியின் மகளைச் சிம்மாசனத்தில் ஏற்றி வைக்க முயன்றேன். அந்த முயற்சியில் தோல்வியுற்றேன். தமிழ் ஓதவும் சிற்ப வேலை கற்கவும் வந்த உம்மைப் பல்லவ சாம்ராஜ்யத்தின் சேனாதிபதி யாக்கினேன்.

அதுவும் நான் செய்த பெருந் தவறு ஆயிற்று. சிற்பியின் மகள் சிம்மாசனத்துக்குத் தகுதியற்றவன் என்பதை நிரூபித்துவிட்டாள். நாடி பார்க்கும் வைத்தியரின் மகன் நாடு பிடிக்கும் சேனைத் தலைவனாக யோக்கியதை அடைய முடியாது என்பதை நீர் நிரூபித்து விட்டீர்......!"

சேனாபதி பரஞ்சோதிக்குக் கண்ணில் நீர் ததும்பிற்று. அவமானமும் ஆத்திரமும் தொண்டையை அடைக்க, தழதழத்த குரலில், "பல்லவேந்திரா!......" என்று ஏதோ சொல்வதற்கு ஆரம்பித்தார்.

"சேனாபதி! நிறுத்தும்!" என்று மாமல்லர் கர்ஜனை செய்ததும் சேனாபதி வாயடைத்துப் போய் நின்றார். இதுவரை மாமல்லர் அவரிடம் இம்மாதிரி பேசியதே இல்லை. மரியாதைக் குறைவாகவோ மனது புண்படும்படியோ அவரைப் பார்த்து ஒரு வார்த்தையும் கூறியதே இல்லை. மாமல்லரின் இந்தப் புதிய ருத்ராவதாரம் பரஞ்சோதிக்குப் பிடிபடவே இல்லை.

மாமல்லர் மேலும் சொல்லம்புகளைப் பொழிந்தார்:—"என்னை யார் என்று எண்ணிக் கொண்டீர்? இந்தச் சிற்பி மகள்தான் என்னை யார் என்பதாக எண்ணிக் கொண்டாள்? என்ன தைரியத்தினால் இந்த மாதிரி ஓலை எழுத அவள் துணிந்தாள்? நீங்கள் இரண்டு பேரும் பல்லவ குலத்தின் பெருமையைக் குலைத்துப் பாழாக்க இப்படி எத்தனை காலமாகச் சதி செய்தீர்கள்? இந்த மூடப் பெண் புத்தியில்லாமல் பிடிவாதம் பிடிக்கும்போது இவளுடைய பிடிவாதத்துக்காக நாம் யுத்தத்துக்கு ஆயத்தம் செய்ய வேண்டும்;—இவள் பார்த்து யுத்தம் வேண்டாம் என்றால் உடனே இவளுடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு யுத்தத்தை நிறுத்திவிட வேண்டுமா? பல்லவ சாம்ராஜ்யமே இவளுக்காகத்தான் இருக்கிறது என்று எண்ணிக் கொண்டாளா? பல்லவ நாட்டுப் பிரஜைகளும் பல்லவ சக்கரவர்த்தியும் இவளுக்குத் தொண்டு செய்யும் அடிமைகள் என்று எண்ணிக் கொண்டாளா! இந்த யுத்தம் இவளுக்காகவே ஏற்பட்டது என்று நினைத்துக் கொண்டல்லவா இப்படி ஓலை எழுதத் துணிந்தாள்! ஒன்பது வருஷம் பிரயத்தனம் செய்து இந்த மகத்தான சைன்யத்துடன் நான் படையெடுத்து வந்தது இந்தச் சலன புத்தியுள்ள சிற்பி மகளின் மூடச் சபதத்தை நிறைவேற்றுவதற்காக அல்ல! இதை நீர் நன்றாகத் தெரிந்து கொள்ளும். பல்லவ குலத்தின் பங்கமுற்ற கௌரவத்தை நிலை நாட்டுவதற்காகவே நான் வந்தேன். மகேந்திர சக்கரவர்த்தி மரணத் தறுவாயில் எனக்கு இட்ட கட்டளையை நிறைவேற்றும் பொருட்டுப் படையெடுத்து வந்தேன். பதினெட்டு வயதில் மகாமல்லன் என்று பட்டம் பெற்ற நரசிம்ம பல்லவனைப் பார்த்து நானிலம் சிரிக்காதிருக்கும் பொருட்டு வந்தேன். அற்ப புத்தியுள்ள சிற்பி மகளின் சபதத்தை நிறைவேற்றுவதற்காக வரவில்லை. இவளிடம் தர்மோபதேசம் பெற்று மோட்சம் அடைவதற்காகவும் நான் வரவில்லை. மேலே யுத்தத்தை நடத்துவதற்கு உமக்கு இஷ்டமில்லையென்று தெரிகிறபடியால் உமக்கு இந்த க்ஷணமே சேனாபதி உத்தியோகத்திலிருந்து விடுதலை தருகிறேன்!"

இவ்வளவு நேரமும் சேனாபதியையே பார்த்துப் பேசிய மாமல்லர் சட்டென்று இலங்கை இளவரசரைத் திரும்பிப் பார்த்து, "மானவன்மரே! நம்முடைய சேனாதிபதி இப்படி நல்ல சமயத்தில் என்னைக் கைவிட்டு விடுவார் என்று அறிந்துதான் உம்மையும் உடன் அழைத்து வந்தேன். நல்லவேளையாக என் விருப்பத்தின்படி நடக்க நீர் ஒருவராவது இருக்கிறீரே? கோட்டையைத் தாக்குவதற்கு உடனே நீர் ஏற்பாடு செய்யும். இன்றிரவே தாக்குதல் ஆரம்பமாக வேண்டும்!" என்றார்.

கோட்டை இடி குமுறி இடித்தாற்போன்ற குரலில் மாமல்லர் இவ்விதம் கர்ஜனை செய்து ஓய்ந்ததும் சிறிது நேரம் அங்கு நிச்சப்தம் குடிகொண்டிருந்தது. அனைவரும் திகைத்துப் போய் நின்றார்கள். மாமல்லர் இப்படி ரௌத்ராகாரம் கொண்டதை அதற்கு முன் அவர்கள் பார்த்தது கிடையாது. அதோடு மாமல்லரையும் பரஞ்சோதி

யையும் இரண்டு உடலும் ஓருயிருமான நண்பர்கள் என்று அவர்கள் அதுகாறும் எண்ணியிருந்தார்கள். பரஞ்சோதியைப் பார்த்து மாமல்லர் இவ்வளவு கடுமையான மொழிகளைக் கூறியது அவர்களைப் பெருங் கலக்கத்துக்கு உள்ளாக்கியது.

மானவன்மரோ, "இது என்ன, பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காக முடிந்ததே! சேனாபதியை என்றென்றைக்கும் நமது விரோதியாக்கிக் கொண்டோமே?" என்று எண்ணி வேதனையடைந்து சும்மா நின்றார்.

"மானவன்மரே! ஏன் நிற்கிறீர்!" என்று மாமல்லர் அதட்டவும், மானவன்மர் பரஞ்சோதியைப் பார்த்தார். மற்றவர்களைப் போலவே அத்தனை நேரமும் திகைத்து நின்ற பரஞ்சோதி அப்போது ஓர் அடி முன்னால் வந்து, தழுதழுத்த குரலில், "பல்லவேந்திரா! பன்னிரண்டு வருஷம் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு நான் செய்திருக்கும் சேவையை முன்னிட்டு ஒரு வரம் அருள வேண்டும்!" என்றார்.

மாமல்லர் மறுமொழி ஒன்றும் சொல்லாமலிருக்கவே, பரஞ்சோதி மேலும் கூறினார்:—"பிரபு! தாங்களும் நானும் இதோ தெரியும் இந்த வாதாபி நகரத்துக்குள்ளே நாற்சந்தியில் நிற்கும் புலிகேசியின் ஜயஸ்தம்பத்துக்கருகில் நின்று ஒரு சபதம் எடுத்துக் கொண்டோம். கூடிய சீக்கிரம் படையெடுத்து வந்து அந்தப் பொய் ஜயஸ்தம்பத்தைப் பெயர்த்துத் தள்ளி விட்டு அதற்குப் பதிலாகப் பல்லவ ஜயத்தின் ஞாபக ஸ்தம்பத்தை அதே இடத்தில் நிலைநாட்டவும் சிவகாமி தேவியை விடுதலை செய்து கொண்டு போகவும் பிரதிக்ஞை செய்தோம். அதை நிறைவேற்றும் பொருட்டுச் சென்ற ஒன்பது வருஷ காலமாக இரவும் பகலும் நாம் உழைத்து வந்தோம். அந்தப் பிரதிக்ஞை நிறைவேறும் வரையில் இந்தச் சேனாபதி பதவியை அடியேன் வகிப்பதற்கு அனுமதி கொடுங்கள்!" என்றார்.

மாமல்லரின் முகத்தில் கோபாவேசம் தணிந்து ஓரளவு மகிழ்ச்சியும் மலர்ச்சியும் காணப்பட்டன. "இதற்கு இவ்வளவு சுற்றி வளைத்து வரம் கேட்பானேன், சேனாபதி! நான் விரும்புவதும் அதுவேதான். உடனே தாக்குதலை ஆரம்பியுங்கள்!" என்றார்.

"தயவுசெய்து மன்னிக்க வேண்டும். இன்னும் ஒரு சிறு கோரிக்கை, பிரபு! கோட்டையைத் தாக்க ஆரம்பித்து விட்டால் ஒரு பகல் ஒரு இரவிற்குள் துரிதமாக முடித்து வெற்றி பெற வேண்டும். அதற்குத் தக்க ஆயத்தம் செய்வதற்கு மூன்று நாள் அவகாசம் கொடுங்கள். இத்தனை நாள் பொறுத்தீர்கள். இன்னும் மூன்று நாள் பொறுத்துக் கொள்ளுங்கள்!" என்று சேனாதிபதி மிக்க வினயத்துடன் கேட்டார்.

மாமல்லரின் மௌனமானது அவர் வேண்டா வெறுப்பாகச் சேனாதிபதி பரஞ்சோதியின் கோரிக்கைக்கு இணங்கியதற்கு அறிகுறியாயிருந்தது!

## அத்தியாயம் 39

## வாதாபி கணபதி

மனிதர்களுக்குள்ளே இருவகை சுபாவம் உள்ளவர்கள் உண்டு. ஒரு வகையார் கொடூரமான காரியங்களையும் காட்சிகளையும் பார்க்கப் பார்க்க அவற்றைக் குறித்து அலட்சியமாக எண்ணத் தொடங்குகிறார்கள். அப்புறம் அத்தகைய கொடூரமான காரியங்களைச் செய்வது அவர்களுக்குச் சகஜமாகி விடுகிறது. ஆரம்பத்தில் பரிதாபம் அளிக்கும் சம்பவங்கள் நாளடைவில் அவர்களுடைய மனதில் எத்தகைய உணர்ச்சியையும் உண்டாக்குவதில்லை.

ஆனால் இன்னொரு வகை சுபாவம் உள்ளவர்களும் இந்த உலகில் இருக்கிறார்கள். கொடூரமான காட்சிகளைப் பார்க்கப் பார்க்க அவர்களுடைய உள்ளம் உணர்ச்சியின்றித் தடித்துப் போவதற்குப் பதிலாக ஆத்திரம் அதிகமாகிறது. பரிதாபச் சம்பவங்களைப் பார்க்கப் பார்க்க அவர்களுடைய மனவேதனை மிகுதி

யாகிறது. அநீதிகளையும் அக்கிரமங்களையும் காணக் காண அவற்றை உலகிலிருந்து ஒழிக்க வேண்டுமென்ற பிடிவாதம் அதிகமாக வளர்கிறது. பிந்திய சுபாவமுள்ள மாந்தர் கூட்டத்தைச் சேர்ந்தவர் சேனாதிபதி பரஞ்சோதி. இரத்தத்தைப் பார்க்கப் பார்க்க இரத்த வெறி அதிகமாகும் ராட்சஸ வர்க்கத்தை அவர் சேர்ந்தவரல்ல. வாதாபிப் பெரும்போரில் போர்க்களத்திலிருந்து ஓடிய இரத்த வெள்ளத்தையும் மலை மலையாகக் குவிந்து கிடந்த மனித உடல்களையும் பார்த்து, படுகாயமடைந்து உயிர்போகும் தறுவாயில் அலறிக் கொண்டிருந்தவர்களின் ஓலத்தையும் கேட்ட பிறகு, பரஞ்சோதியின் உள்ளத்தில், "இந்தப் பயங்கரமெல்லாம் என்னத்திற்கு? மனிதருக்கு மனிதர் கொடுமை இழைப்பதும் கொன்று கொண்டு சாவதும் எதற்காக?" என்ற கேள்விகள் எழுந்திருந்தன.

அத்தகைய மனோ நிலைமையில் சிவகாமி தேவியின் ஓலை வரவே, அதில் எழுதியிருந்த ஒவ்வொரு வார்த்தையும் உண்மையென்று அவருக்குப் பட்டது. மேலும் அத்தகைய கொடுஞ் செயல்களில் தம்மைப் புகவொட்டாமல் தடுத்தாட் கொள்வதற்காக இறைவனே சிவகாமி தேவியின் மூலம் அத்தகைய உபதேசத்தைச் செய்தருளியதாக அவர் எண்ணினார். இல்லாவிடில் மாமல்லருக்கு நேராக ஓலை எழுதாமல் ஆயனர் மகள் தமக்கு எழுத வேண்டிய காரணம் என்ன?

சிவகாமி தேவியே தமது சபதத்தை நிறைவேற்ற வேண்டிய அவசியமில்லை என்று சொல்லி விட்டபடியால், மாமல்லரும் அதற்கு உடனே இணங்கி விடுவார் என்று பரஞ்சோதி கருதினார். புலிகேசி பத்து வருஷத்துக்கு முன்னால் பல்லவ நாட்டில் செய்த கொடுமைகளுக்காக இப்போது வாதாபி நகரின் ஜனங்கள் மீது பழி தீர்த்துக் கொள்வதில் யாருக்கு என்ன லாபம்? மேலும் இது இத்துடன் போகும் என்பது என்ன நிச்சயம்? பத்து வருஷத்துக்கு முன்னால் புலிகேசி பல்லவ நாட்டில் செய்த அக்கிரமங்களுக்கு இப்போது வாதாபி மக்கள் மீது நாம் பழி வாங்குகிறோம். அதேமாதிரி இன்னும் சில வருஷம் கழித்துச் சளுக்க வம்சத்தார் மறுபடி பல்லவ நாட்டின்மீது பழி வாங்கப் பிரயத்தனப் படலாம் அல்லவா? நாட்டை ஆளும் மன்னர்கள் தங்களுடைய சொந்தக் கௌரவத்தையும் குல கௌரவத்தையும் நிலைநாட்டிக் கொள்வதற்காக ஒருவரையொருவர் பழிவாங்க முற்படுவதினால், இருதரப்பிலும் குற்றமற்ற ஜனங்கள் அல்லவா சொல்ல முடியாத அவதிகளுக்கு உள்ளாகிறார்கள்?......

இப்படியெல்லாம் சேனாபதி பரஞ்சோதியின் உள்ளம் சிந்தனை செய்து கொண்டிருந்தது. இடையிடையே மாமல்லர் விடுத்த கூரிய சொல்லம்புகளின் நினைவு அவருக்கு வேதனையளித்துக் கொண்டிருந்தது. மாமல்லருக்கும் தனக்கும் உள்ளமும் உயிரும் ஒன்றே என்பதாக எண்ணி மனப்பால் குடித்துக் கொண்டிருந்ததெல்லாம் பொய்யாக அல்லவா போய்விட்டது? தம்முடைய யோசனையை அவ்வளவு அலட்சியமாகப் புறக்கணித்ததோடு, மற்றவர்களுக்கு முன்னால் தம்மை அவ்வளவு அகௌரவப் படுத்திப் பேசி விட்டாரே? அரச குலத்தினரின் சுபாவமே இப்படித்தான் போலும்! அதிலும் அந்த இலங்கைக்காரன் வந்ததிலிருந்து மாமல்லருடைய சுபாவமே மாறிப் போய்விட்டது! எல்லாம் அவனால் வந்த வினைதான்! ...

மாமல்லரிடம் மூன்று நாள் அவகாசம் கொடுக்கும்படி சேனாபதி பரஞ்சோதி கோரியபோது, கோட்டைத் தாக்குதலுக்குத் தக்க ஆயத்தம் செய்வதற்காகவே அவ்விதம் கோருவதாகக் கூறினார். இந்தக் காரணம் என்னமோ உண்மைதான். ஆயத்தமில்லாமல் ஆரம்பித்துப் பத்து நாளில் செய்யக் கூடிய காரியத்தைத் தகுந்த ஆயத்தங்களுடன் ஆரம்பித்து ஒரே நாளில் செய்து விடலாம் என்னும் உண்மையைச் சேனாபதி பரஞ்சோதி தமது அனுபவத்தில் கண்டறிந்திருந்தார். எனவே அந்த முறையைத் தமது யுத்த தந்திரங்களில் முதன்மையான தந்திரமாக அனுஷ்டித்து வந்தார்.

ஆனால் சேனாபதி மூன்று நாள் அவகாசம் கேட்டதற்கு மேற்கூறிய முக்கிய காரணத்தைத் தவிர இன்னும் இரண்டு காரணங்களும் இருந்தன.

மாமல்லர் ஆத்திரத்தினால் ஆங்காரப்பட்டுப் பரஞ்சோதியின் யோசனையைப் புறக்கணித்து விட்ட போதிலும் மூன்று தினங்கள் ஆர அமரச் சிந்தித்தால் ஒரு வேளை தமது மனதை மாற்றிக் கொள்ளலாமல்லவா என்ற ஆசை ஒரு காரணம்.

இன்னொன்று, இன்னமும் கோட்டைக்குள்ளே இருக்கும் சிவகாமி தேவியைப் பத்திரமாக வெளியில் கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என்பதுதான். பல்லவ சைன்யம் கோட்டையை வெளியிலிருந்து தாக்குவது என்று ஆரம்பிக்கும்போது, கோட்டைக்குள்ளே ஆயனரின் குமாரிக்கு ஏதேனும் ஆபத்து விளையாது என்பது என்ன நிச்சயம்?

இதைப் பற்றி ஏற்கெனவே மாமல்லரும் பரஞ்சோதியும் கலந்து யோசனை செய்து, கோட்டைக்குள்ளே ஒரு சிலரை முன்னதாக அனுப்புவதற்குச் சுரங்க வழி ஏதாவது இருக்கிறதா என்று கண்டு பிடிக்கச் சத்ருக்னனையும் குண்டோதரனையும் ஏவியிருக்



தார்கள். இவர்களுடைய முயற்சி என்ன ஆகிறது என்று பார்ப்பதற்காகவும் சேனாபதி மூன்று நாள் அவகாசம் கேட்டார்.

அந்த மூன்று நாளும் முடியும் சமயம் இப்போது வந்து விட்டது. மூன்றாம் நாள் சூரியன் அஸ்தமிக்கும் நேரம். அன்றிரவு மாமல்லர் தமது முடிவைச் சொல்லி விடுவார். உடனே தாக்குதலை ஆரம்பிக்க வேண்டியதாயிருக்கும். ஆனால் சத்ருக்னனும் குண்டோதரனும் இன்னும் வந்தபாடில்லை. இந்த தர்மசங்கடத்துக்கு என்ன செய்வது? மாமல்லர் ஒரு வேளை தமது கருத்தை மாற்றிக் கொண்டு சண்டையில்லாமலே கோட்டையின் சரணாகதியை ஒப்புக் கொள்வதாயிருந்தால் நல்லதாய்ப் போயிற்று. இல்லாவிடில், சிவகாமி தேவிக்கு அபாயம் ஒன்றும் நேராமல் பாதுகாப்பது எப்படி?

இவ்விதமெல்லாம் பலவாறாகச் சிந்தனை செய்து கொண்டே பல்லவ சேனாபதி வாதாபிக் கோட்டை மதிள் ஓரமாகக் குதிரைமீது வந்து கொண்டிருந்தார். கோட்டைக்கு உட்புறத்தில் ஏதோ இத்தனை நாளும் இல்லாத சலசலப்பு ஏற்பட்டிருந்ததாகத் தோன்றியது. இத்தனை நாளும் கோட்டைக்குள்ளே எல்லையற்ற மௌனம் சதா குடிகொண்டிருந்திருக்க, அதற்கு மாறாக இப்போது ஏதோ நானாவிதச் சத்தங்கள் எழுந்து கொண்டிருந்தன. இதனால் பரஞ்சோதியின் உள்ளக் கொந்தளிப்பு அதிகமாயிற்று. கோட்டையின் பிரதான முன் வாசலை அடைந்ததும் பரஞ்சோதி குதிரையை நிறுத்தினார். கோட்டையைத் தாக்குவதாயிருந்தால் அந்தப் பிரதான வாசலின் பிரம்மாண்டமான கதவுகளை முதன் முதலில் உடைத்தெறிந்தாக வேண்டும். அப்போதுதான் ஏககாலத்தில் அநேக வீரர்கள் உள்ளே புகுவது சாத்தியமாகும். சொற்ப நேரத்தில் நகரைக் கைப்பற்ற முடியும். இதற்கு வேண்டிய ஏற்பாடுகள் முன்னமே செய்யப்பட்டிருந்தனவாயினும் கடைசி முறையாக யானைப் படை வீரர்களுக்குக் கட்டளையிடுவதற்கு முன்னால் ஒரு தடவை அந்த வாசலை நன்றாய்க் கவனிக்கச் சேனாபதி விரும்பினார். எனவே, குதிரை மேலிருந்து இறங்கி வாசலை நெருங்கி வந்தார். அப்போது அந்த வாதாபிக் கோட்டை முன் வாசலில் அமைக்கப்பட்டிருந்த அருமையான வேலைப்பாடமைந்த சிற்பங்கள் அவர் கவனத்தைக் கவர்ந்தன. அந்தச் சிற்பங்களிலே கணபதியின் விக்கிரகம் ஒன்றும் இருந்தது. பரஞ்சோதி அதன் அருகில் சென்று கைகூப்பி நின்றார். மனதிற்குள் பின் வருமாறு பிரார்த்தனை செய்து கொண்டார்:—

"விக்னங்களையெல்லாம் நிவர்த்தி செய்யும் விநாயகப் பெருமானே! நாங்கள் வந்த காரியம் நன்கு நிறைவேற அருள் புரிய வேண்டும். என் குருதேவரின் குமாரி சிவகாமி தேவிக்கு எவ்விதத் தீங்கும் நேரிடாமல் அவரைப் பத்திரமாய் அவருடைய தந்தை ஆயனரிடம் ஒப்புவிப்பதற்குத் துணை செய்ய வேண்டும். என்னுடைய இந்தப் பிரார்த்தனையை நீ நிறைவேற்றி வைத்தால் பதிலுக்கு நானும் உனக்கு இந்தக் கோட்டைத் தாக்குதலில் எவ்விதத் தீங்கும் ஏற்படாமல் பார்த்துக் கொள்கிறேன். உன்னை என் பிறந்த ஊருக்குக் கொண்டு போய் ஆலயங் கட்டிப் பிரதிஷ்டை செய்வித்துத் தினந்தோறும் பூஜையும் நடத்துவிக்கிறேன்!"

இவ்வாறு பரஞ்சோதி பிரார்த்தனை நடத்தி முடித்த அதே கணத்தில் அந்தக் கோட்டை வாசலுக்குச் சற்றுத் தூரத்தில் நின்ற பல்லவ வீரர்களிடையே மிக்க பரபரப்புக் காணப்பட்டது. கோட்டை வாசலின் உச்சியைப் பார்த்த வண்ணம் அவர்கள் ஹாஹாகாரம் செய்தார்கள். அது சேனாபதியின் கவனத்தையும் கவரவே அவர் அந்த வீரர்களை நோக்கினார். அவர்களில் ஒருவன், "சேனாபதி! வெள்ளைக் கொடி இறங்கி விட்டது!" என்று கூவினான்.

அவர்களுடைய வியப்புக்கும் பரபரப்புக்கும் காரணத்தை அறிந்து கொண்ட சேனாபதி தாமும் அவர்களிருந்த இடத்துக்கு விரைந்து சென்று கோட்டை வாசலின் உச்சியைப் பார்த்தார். மூன்று நாளாக அங்கே பறந்து கொண்டிருந்த சமாதான வெள்ளைக் கொடி காணப்படவில்லை!

---

# கண்ணனும் மறைந்தான்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

**பா**ரத யுத்தம் முடிந்த பின், துவாரகையில் கிருஷ்ணன் முப்பத்தாறு ஆண்டுகள் அரசாண்டான். கிருஷ்ணனுடைய குலத்தைச் சேர்ந்த விருஷ்ணிகள், அந்தகர்கள், போஜர்கள் என்று பல பெயர் கொண்ட யாதவ ராஜகுமாரர்கள் வரம்பு கடந்த சுகத்தில் காலங் கழித்து வந்தார்கள். அவ்வாறு நடத்திய வாழ்க்கையினால் அடக்கமும் ஒழுக்கமும் இழந்தார்கள்.

ஒரு நாள் சில ரிஷிகள் துவாரகைக்கு வந்தார்கள். அப்போது யாதவர்கள் பெரியோர்களிடம் அலக்ஷியங் கொண்டு ரிஷிகளைப் பரிகசிப்பதற்காகத் தங்களுள் ஒருவனுக்குப் பெண் வேஷம் போட்டு முனிவர்களிடம் சென்று "சாஸ்திரம் படித்தவர்களே! இந்தப் பெண்ணுக்கு என்ன குழந்தை பிறக்கும், சொல்லுங்கள்" என்றார்கள்.

ரிஷிகள் இந்தப் பொய்யையும் பரிகாசத்தையும் கண்டு கோபம் மேலிட்டு "இவனுக்கு ஒரு உலக்கை பிறக்கும். இந்த உலக்கை உங்கள் குலத்துக்கு யமனாகும்" என்று சபித்து விட்டுத் திரும்பிப் போய்விட்டார்கள்.



முனிவர்களின் சாபத்தைக் கேட்டு வேடிக்கையாகச் செய்தது இப்படி ஆயிற்றே என்று யாதவர்கள் மிகவும் பயந்தார்கள்.

மறுநாள் ரிஷிகள் சொன்னபடியே ஸ்திரீ வேஷம் தரித்த சாம்பனுக்குப் பிரசவ வேதனை அடைந்து ஒரு உலக்கை உண்டாயிற்று. இதைக் கண்டு ரிஷிகளுடைய சாபம் உண்மையாகவே முடியும் என்று யாதவர்கள் மிக்க மனோவேதனையடைந்தார்கள். உலக்கையை யமசொரூபமாகக் கருதி பயந்தார்கள். அதன் மேல் எல்லாரும் சேர்ந்து ஆலோசனை செய்து உலக்கையை எடுத்துச் கட்டுச் சாம்பலாக்கி விட்டுக் கடற்கரையில் இறைத்து விட்டார்கள். அந்தச் சாம்பலின் மேல் மழை பெய்து அந்த இடத்தில் கோரைப்புல் ஏராளமாக முளைத்தது. தங்களுடைய பயம் தீர்ந்து விட்டது என்று எண்ணி யாதவர்கள் ரிஷியின் சாபத்தை மறந்தார்கள்.

**பி**றகு ஒருநாள் யாதவர்கள் கூட்டமாகக் கடலோரம் சென்று கூத்திலும் மதுபானத்திலும் உல்லாசமாகப் பொழுது போக்கினார்கள்.

கள்ளினுடைய வேகம் வேலை செய்ய ஆரம்பித்தது. யாதவ குலத்தில் கிருதவர்மன் கௌரவர்கள் பக்கத்திலும் சாத்யகி பாண்டவர்கள் பக்கத்திலும் சேர்ந்து யுத்தம் செய்தார்கள் அல்லவா?

"எந்த க்ஷத்திரியனாவது தூங்குகின்றவர்களைக் கொல்லுவானா? கிருதவர்மனே, யாதவ குலத்துக்கே நீ ஒரு பெரிய அவமானத்தைக் கொண்டு வந்து விட்டாய்" என்று சாத்யகி கிருதவர்மனைப் பார்த்துப் பரிகாசம் செய்தான். போதையிலிருந்த மற்றும் பலர் இந்தப் பரிகாச வார்த்தையை ஆமோதித்தனர். கிருதவர்மனுக்குக் கடுங் கோபம் வந்து விட்டது.

"யுத்தத்தில் கை அறுக்கப்பட்டுப் பிராயோபவேசம் செய்து யோக நிலையில் இருந்த மகான் பூரிசிரவஸைக் காப்பு

காரனைப்போல் கொன்ற நீ என்னைப் பற்றி எப்படிப் பேசலாம்?" என்றான் கிருதவர்மன். அதன்மேல் வேறு பலர் சாத்யகி செய்த அந்த அநாகரிகத்தை எடுத்துப் பேச ஆரம்பித்தார்கள். பிறகு எல்லா யாதவர்களும் கலகத்தில் சேர்ந்து கொண்டார்கள். சண்டை பலமாக முற்றிக் கொண்டது.

"தூங்கி யிருந்தவர்களைக் கொன்ற பாதகன், இதோ பார்; தன் முடிவை அடைந்தான்" என்று சொல்லிச் சாத்யகி கிருதவர்மன் மேல் பாய்ந்து கத்தியால் அவன் தலையை வெட்டி வீழ்த்தி விட்டான். அதைக் கண்டு பலர் சாத்யகியைச் சூழ்ந்து கொண்டு அங்கிருந்த பான பாத்திரங்களை அவன் மேல் எறிந்து தாக்கினார்கள். இவ்வாறு சாத்யகியைச் சூழ்ந்து கொண்டு தாக்கினவர்களைக் கிருஷ்ணன் மகன் பிரத்யும்னன் எதிர்த்துப் போராடினான். அவனைப் பலர் சூழ்ந்து கொண்டு தாக்கினார்கள். பிரத்யும்னனும் சாத்யகியும் உயிரிழந்தார்கள். அதன் பேரில் கிருஷ்ணனுக்கும் கோபம் மேலிட்டு அவ்விடம் கடலோரத்தில் வளர்ந்து நின்ற கோரைப் புல்லைப் பிடுங்கி எடுத்து அதைக் கொண்டு எல்லாரையும் தாக்கினான். அவ்வாறே யாதவ கூட்டத்தார் எல்லாரும் கோரைப் புல்லைப் பிடுங்கி ஒருவரை யொருவர் அடித்துக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

உலக்கைச் சாம்பலிலிருந்து உண்டான அந்தக் கோரைப் புல் எல்லாம் ரிஷிகளுடைய சாபத்தால் பிடுங்கிய உடனே உலக்கைகளாயின. அந்த உலக்கைகளால் ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டு யாதவ குலம் முழுதும் கள் வெறியில் நடந்த இந்தக் கலகத்தில் மாண்டார்கள்.

* * *

மதுபானத்தின் பயனாகத் தோன்றிய மதிமறைவும் கோபமும் புகழ் பெற்ற யாதவ குலத்தின் விநாசத்திற்குக் காரணமாயிற்று. கண்ணனும் பலராமனும் தோன்றிய குலமும் இத்தகைய முடிவை அடைந்தது என்றால் வேறென்ன சொல்ல வேண்டும்?

இதை யெல்லாம் கண்ட பலராமன் துயரம் மேலிட்டு யோகத்தில் அமர்ந்து உயிரை நீத்தான். வெள்ளைப் பாம்பு வடிவத்தில் அவன் முகத்திலிருந்து ஜோதி புறப்பட்டுக் கடலில் கலந்து மறைந்தது. பலராமனுடைய அவதாரம் முடிந்தது. பந்துக்கள் அனைவரும் ஒருவரும் மிஞ்சாமல் நாசமடைந்து சகோதரனும் மறைந்ததைப் பார்த்த கிருஷ்ணன் தியானத்தில் மூழ்கினான். பிறகு தன்னைத் தனியாகக் கடற்கரை வனத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தான். நடந்ததை யெல்லாம் எண்ணித் தானும் இந்த உலகத்தை விட்டு மறையும் காலம் வந்தது என்று அறிந்து தரையில் படுத்தான். அப்படியே தூங்கிப் போனான்.

அப்போது அந்தக் காட்டில் மிருகங்களைத் தேடித் திரிந்த வேடன் ஒருவன் படுத்திருந்த வாசுதேவனைத் தூரத்திலிருந்து பார்த்து அது ஒரு மான் என்று எண்ணி வில்லை வளைத்து அம்பு எய்தான். அது கிருஷ்ணன் உள்ளங் காலில்பட்டு உயிரைத் தாக்கிச் சென்றது. வாசுதேவன் மறைந்தான்.

# அம்பாலா-தமிழ் நாடகம்

பஞ்சாப் மாகாணத்தைச் சேர்ந்த அம்பாலாவில் உள்ள தென்னிந்தியர்கள் "தென்னிந்தியர் கழகம்" என்று ஒரு சங்கத்தை நிறுவியிருக்கிறார்கள். 1945-வருஷத்தில் தொடங்கிய மேற்படி சங்கம் ஸ்ரீ கே. பவானிசங்கர் அவர்களைத் தலைவராகக் கொண்டு மிகச் சிறந்த முறையில் பணியாற்றி வருகின்றது.

தமிழ்ப் புது வருஷக் கொண்டாட்டத்தை முன்னிட்டு இங்கே சென்ற 13-4-46 சனிக்கிழமை இரவு ஆகாய விமானப் படையைச் சேர்ந்த நம் தென்னிந்திய வாலிபர்கள் "வஸந்தா" என்ற சமூக நாடகத்தை மிக அற்புதமாக நடத்தினார்கள்.

நாடகத்துக்கு ஸ்ரீ பவானி சங்கர் ராவ் முதலிய பிரமுகர்கள் விஜயம் செய்திருந்தார்கள். நாடகத்தின் இடையில் நடத்தப்பட்ட நாட்டியத்திற்குப் பாரதியின் பாடல்களும், பழந் தமிழ்க் கும்மிகளும் பின்னணிச் சங்கீதமாக அமைந்தன. நாடகமேடை ஏற்பாடு, மின்சார விளக்குகளின் அமைப்பு, எல்லாம் மிகவும் மெச்சத்தக்கதாயிருந்தன. தூரதேசத்தில் வாழும் தென்னிந்தியர்களின் இத்தகைய கலைத் தொண்டைப் பற்றி மிகவும் மகிழ்ச்சி யடைகிறோம்.

# எதிர்பாராதது

சாவி




ஜயந்தி பெயருக் கேற்ற அழகு வாய்ந்தவள். அவளுடைய தகப்பனார் ஒரு ஏழை. ஆதலால் ஜயந்திக்கு ஆடம்பரமான ஆடை ஆபரணங்கள், நகை நட்டு அதிகம் கிடையாது. "எனக் கென்னத்திற்கு நகை?" என்பதைப் போல் எப்போதும் அவள் முகத்தில் புன்னகை மட்டும் அரும்பிக் கொண்டிருக்கும்!

ஜயந்தியின் தகப்பனார் மூன்று மைலுக்கப்பாலுள்ள ஒரு நகரத்தில் ஜவுளிக் கடையில் குமாஸ்தா வேலை பார்த்துக் கொண்டிருந்தார். காலையில் எழுந்துபோனால் இராத்திரிதான் வீடு திரும்புவார்.

ஜயந்திக்கு இப்போது ஒன்பது வயதாகிறது. அவளுடைய தாயார் இறந்து மூன்று வருஷங்கள் ஆகிவிட்டன. எனவே, தகப்பனார் வேலைக்குப் போய் விட்டால் அவளுக்குத் துணையாக வீட்டில் யாருமே கிடையாது. அப்பா கடையிலிருந்து திரும்பி வரும்வரை அவள் தன்னந் தனியாகத்தான் இருக்க வேண்டும். 'திக்கற்றவர்க்குத் தெய்வமே துணை' என்றபடி ஜயந்திக்கும் தெய்வம்தான் துணை. தனித்திருக்கும் சமயங்களில் அவளுடைய இளம் இருதயம் தாயின் பிரிவை நினைத்து அடிக்கடி வேதனைக்குள்ளாயிற்று.

"அப்பா, அம்மா எங்கே போனாள்? திரும்பியே வரமாட்டாளா?" என்று அவள் அடிக்கடி அப்பாவைக் கேட்பாள்.

"ஆம், ஜயந்தி!" என்று தகப்பனார் பதில் கூறும்போது அவளுடைய களங்கமற்ற முகத்தில் சோகத்தின் சாயல் படர்ந்து பரவும். புன்னகை லேசாக மறையும். அவள் தகப்பனார் இதைக் கண்டு பெருமூச்சு விடுவார்.

இவ்வாறு சில தினங்கள் கழிந்தன.

ஒரு வருஷம் சென்றதும் அப்பா மறுமணம் செய்து கொண்டார். சூடாமணி என்ற பதினெட்டு வயது இளம் பெண் ஒருத்தி அந்த வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். எப்போதும் சிரித்த முகம்; பேச்சிலே ஒரு குளுமை; வசீகரமான தோற்றம்.

ஜயந்திக்கும் சூடாமணியை ரொம்பவும் பிடித்திருந்தது. சூடாமணியின் வரவினால் ஜயந்தியின் வாழ்க்கையில் புது உற்சாகம் தோன்றியது. சூடாமணி வந்த பிறகு அவளேதான் வீட்டின் சகல வேலைகளையும் கவனித்துக் கொண்டாள். ஜயந்தியைப் பார்த்தவுடனேயே பிடித்து விட்டது அவளுக்கு.

அது முதல் அவர்களிருவரும் ஒருவரை யொருவர் அன்புடன் நேசிக்கத் தொடங்கினார்கள். அவர்களுக்குள் ஏற்பட்ட வாத்சல்யமானது வளர் பிறைபோல் வளர்ந்து, தேய் பிறைபோல் தேயாமல் பூர்ண சந்திரிகையாகவே நின்று விட்டது. அவர்களிருவரில் பார்ப்பதற்குச் சூடாமணியே சிறியவளாய்க் காணப்பட்டாள்.

அவர்களிருவருடைய அந்நியோன்ய வாழ்க்கையைக் கண்ட ஜயந்தியின் தகப்பனார் தம்முடைய துக்கத்தையும் ஏழ்மையையும் மறந்தார்.

ஜயந்தியின் குதூகலம் நிறைந்த வாழ்க்கையில் மறுபடியும் ஒரு சோக சம்பவம் நிகழ்ந்தது.

இரண்டொரு வருஷங்களுக்கெல்லாம் சூடாமணி கர்ப்பிணியானாள். பத்தாவது மாதத்தில் ஒரு அழகான பெண் குழந்தையை ஈன்றெடுத்த அவள் தன்னுடைய கண்களையும் சாசுவதமாக மூடிக்கொண்டாள். போகும்போது அவள் ஜயந்தியை அருகில் அழைத்து அன்புடன், "ஜயந்தி!




இந்தக் குழந்தையை உன்னிடம் விட்டுச் செல்கிறேன். நீதான் அவளைப் பார்த்துக் கொள்ள வேண்டும். அவளை நான் எப்படி நேசித்து வளர்ப்பேனோ அதே மாதிரி நீ அவளை வளர்க்க வேண்டும். அவளுக்குச் சூடாமணி என்றே பெயர் வைத்து விடு. அப்போதுதான் உனக்குச் சதா என்னுடைய ஞாபகம் இருந்து கொண்டிருக்கும்" என்றாள்.

• • •

அன்று முதல் ஜயந்தி தான் ஒரு சிறு பெண் என்பதை மறந்து தன்னை ஒரு வயது வந்த ஸ்திரீயாகவே நினைத்துக் கொண்டாள். இதற்குள்ளாகவே அவளுக்கு வாழ்க்கையில் நல்ல அநுபவம் ஏற்பட்டிருந்தது. கஷ்டங்களை மறப்பதற்காக அடிக்கடி குழந்தை சூடாவைக் கையில் எடுத்து வைத்துக் கொஞ்சுவாள். தன்னைப் போலவே அதுவும் தாயற்ற குழந்தை என்பதை நினைக்கும் போது அவளுக்கு அதன் மீது அளவற்ற அநுதாபம் ஏற்பட்டது.

துக்கமும் துயரமும் கலந்த ஜயந்தியின் வாழ்க்கையில் ஒரு சிறு மாறுதல் ஏற்பட்டது. அது அவளுக்குப் பெரும் ஆறுதலாயுமிருந்தது.

அடுத்த வீட்டுக்கு வாசுதேவன் என்று ஒரு பையன் வந்து சேர்ந்தான். அவனுக்குப் பத்து அல்லது பதினொரு வயதுதான் இருக்கும். சிறு வயதிலேயே தாய், தகப்பன் இருவரையும் இழந்து விட்டான். ஜயந்தியின் அடுத்த வீட்டில்தான் அவனுடைய மாமா வசித்து வந்தார். வாசுதேவனுடைய மாமா தமக்குக் குழந்தைகள் இல்லாத குறையை வாசுதேவனை வளர்ப்பதன் மூலம் தீர்த்துக் கொண்டார்.

வாசுதேவன் அடிக்கொரு தடவை ஜயந்தியின் வீட்டுக்கு வந்து போவான். ஜயந்தி சொல்லும்



எந்தக் காரியத்தையும் தட்டாமல் செய்யச் சித்தமாயிருந்தான்.

ஜயந்தியின் தகப்பனுருக்கு அவனிடம் ஒரு அலாதியான அன்பு. தன் வீட்டிலேயே இரு தாயில்லாக் குழந்தைகள் இருப்பதை மறந்து விட்டு, "ஐயோ பாவம்! தாயில்லாப் பையன்" என்று அந்தப் பையன் மீது கருணை காட்டுவார்.

சிறு குழந்தையான வாசுதேவன் குடிக்கு விளையாட்டுக் காட்டுவான்; தொட்டிலில் போட்டு ஆட்டுவான். மறுபடியும் கையில் எடுத்து 'ஞஞஞ' என்று நாக்கை நீட்டிக் கண்களைச் சிமிட்டி வேடிக்கை பண்ணுவான். ஜயந்தியின் அப்பாவைக் காட்டி "இதோ, அப்பா!" என்பான். ஜயந்தியைக் காட்டி "இதோ, அம்மா!" என்பான்.

வாசுதேவனுக்குப் பதினோரு வயதானதும் அவனுடைய மாமா அவனை டாக்டர் படிப்புக்காக அடுத்த நகரத்திலுள்ள ஹாஸ்டலில் கொண்டு சேர்த்தார். எனவே அதற்குப் பிறகு அவனால் ஜயந்தியை அடிக்கடி பார்க்க முடியவில்லை. எப்போதாவது ஞாயிற்றுக் கிழமைகளில் வருவான். மறுநாளே திரும்பிப் போய் விடுவான். இரண்டு மூன்று வருஷங்கள் இப்படியே போயின. அப்புறம் அவனுக்குத் தான் பெரிய மனிதனாகி விட்டதாக ஒரு எண்ணம் ஏற்பட்டு விட்டது. எனவே கடந்து போன சம்பவங்களெல்லாம் அவனுக்குச் சிறு பிள்ளைத்தனமாகவே பட்டது.

வரவர அவனுடைய நடை உடை பாவனைகளிலெல்லாம் பெரிய மனுஷத்தனமே கலந்திருந்தது. உருவத்திலும் குரலிலும்கூட வித்தியாசம் காணப்பட்டது.

ஜயந்தியும் அப்படித்தான். திடீரென்று அவள் தோற்றத்தில் வெகுவாக மாறிப் போயிருந்தாள். வாசுதேவன் ஒரு நாள் அவளை அகஸ்மாத்தாகக் கண்டபோது தான் வேறு யாரோ ஒரு புதிய ஸ்திரீயைக் காண்பதாகவே நினைத்தான். பழைய ஜயந்தியா இப்படி மாறிப் போய் விட்டாள் என்று நினைத்தபோது அவனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. கண்களை அகல விரித்து ஜயந்தியை ஆச்சரியத்துடன் சற்று நேரம் பார்த்துக்கொண்டிருந்தான். ஜயந்தி அப்போதுதான் கையில் தேங்காய், பழத்துடன் கோவிலுக்குப் போய்விட்டு வீட்டுக்குத் திரும்பி வந்துகொண்டிருந்தாள்.

அவன் எங்கேயோ தபாலாபீஸுக்குப் போய் விட்டு வந்துகொண்டிருந்தான்.

"ஜயந்தி! என்ன இது, உன்னை அடையாளமே தெரியவில்லையே? இப்படி ஒரேயடியாய் மாறி விட்டாயே, ஏன்?" என்று கேட்டான்.

ஜயந்தி தனக்கே உரித்தான விசேஷப் புன்னகையுடன், "அப்படி ஒன்றும் இல்லையே; முன்னெல்லாம் பாவாடை கட்டி மேலாக்குப் போட்டுக் கொண்டிருப்பேன். இப்போது புடவை கட்டிக் கொள்கிறேன்!" என்று லஜ்ஜையுடன் கலக்கமற்றுப் பேசினாள்.

வாசுதேவன் மேலும் அவளையே உற்றுக் கவனித்தான். ஜயந்தி வெட்கத்துடன் முகத்தைச் சற்றுத் திருப்பிக் கொண்டாள். மறுபடியும் அவள் அவனைத் திரும்பிப் பார்த்த போதும் அவன் அவளையே நோக்கிக் கொண்டிருந்தான். இந்த மௌன சம்பவம் சிறிது நேரம் நீடித்தது.

பின்னர் வாசுதேவன் ஒன்றும் பேசத் தெரியாதவனாய்க் கலகல வென்று சிரித்தான். அந்தச் சந்தர்ப்பத்தில் மறுபடியும் எப்படியோ அவனுக்குச் சிறு பிள்ளைத்தனம் வந்து விட்டது. பிறகு உடனே இருவரும் பிரிந்து போய் விட்டார்கள். என்றுமில்லாத வெட்கத்துடனும் திருப்தியுடனும் தலைகுனிந்தவாறே நடந்து சென்றாள் ஜயந்தி.

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு அவர்கள் மறுபடியும் சந்திப்பதற்கு எத்தனையோ ஞாயிற்றுக்கிழமைகள் கழிந்து விட்டன.

ஜயந்திக்கு இப்போது வயது பதினாறு ஆகிவிட்டது.

வாசுதேவன் டாக்டருக்குப் படித்து முடித்த பிறகு, கராச்சியில் யுத்த இலாகாவில் எங்கோ நல்ல சம்பளத்தில் வேலை செய்து கொண்டிருந்தான்.

ஜயந்தியின் உதவி தகப்பனுருக்கு அத்தியாவசியமாயிருந்தது. அவள் இல்லாமல் குடும்பக் காரியங்கள் நடப்பதெப்படி? சிறு குழந்தை குடியை யார் அத்தனை பட்சமாக வளர்ப்பார்கள்? ஜயந்தியோ அவள் தகப்பனாரோ அவளுடைய விவாகத்தைப் பற்றிச் சிறிதும் சிந்திக்கவும் இல்லை; கவலைப்படவுமில்லை. குடும்பத்தின் பிற்கால வாழ்க்கையைக் குறித்தும் யோசிக்கவில்லை. அவர்கள் பாட்டுக்கு இயந்திரம்போல் வேலை செய்து கொண்டிருந்தனர்.

சின்னஞ் சிறு குடியும் கவலையற்று விளையாடிக் கொண்டிருந்தான். அவனுடைய கண்கள் தாயாரின் கண்களைப் போலவே அழகாயிருந்தன. ஜயந்தியின் தகப்

பனார் குழந்தை சூடியைப் பார்த்துப் பார்த்துப் பரவச மடைந்தார். அவளுடைய மிருதுவான இளம் கைகளைத் தம் கன்னத்தில் கொண்டு வைத்துக் கொஞ்சினார். இறந்து போன அவருடைய இளம் மனைவியின் பிரதி பிம்பத்தைப் பார்ப்பதாகவே தோன்றியது அவருக்கு.

தாம் ஒரு ஏழை என்பதுகூட மறந்து போயிற்று அவருக்கு. தமக்குக் கடவுள் அளித்திருக்கும் இந்தச் சின்னஞ் சிறு செல்வமே போதும் என்று எண்ணித் திருப்திப்பட்டார்.

ஜயந்தி மட்டும் அடிக்கடி வாசுதேவனை நினைத்துக் கொள்வாள். அவள் நினைத்துக் கொள்ளா விட்டாலும் வெள்ளிக்கிழமைகளில் கோவிலுக்குப் போய்விட்டு வாசுதேவனைச் சந்தித்த அந்த இடத்துக்கு வரும்போது தானாகவே அவன் நினைப்பு வந்து விடும். எனவே அவளுடைய நீண்ட காலப் பிரிவை வெள்ளிக்கிழமை என்னும் கஜக்கோலால் அவள் ஓயாமல் அளந்து கொண்டேயிருந்தாள்.

அந்த வெள்ளிக்கிழமை சம்பவமானது அவளுடைய இருதய பீடத்திலே ஊன்றி வளர்ந்து பெரும் ஆலவிருட்சமாகி விட்டது. அந்த மகத்தான குதூகல தினத்துக்கு இணையான தினம் இனி உண்டென்றால் அது மறுபடியும் வாசுதேவனைச் சந்திக்கும் தினமாய்த்தான் இருக்க வேண்டும்.

ஜயந்தி முதல் ஐந்து வருஷங்களை மிகவும் பொறுமையுடன் கழித்தாள். அடுத்த வருஷங்கள் இன்னும் கடினமா யிருந்தன. கடைசியில் வாசுதேவன் அடுத்த மாதம் வரப்போகிறான் என்ற செய்தியைக் கேட்டதும் அவளுடைய மனவேதனை சொல்ல முடியாததாயிற்று.

அவன் வரும் தினத்தைச் சுவரில் குறி போட்டு எண்ணிக் கொண்டேயிருந்தாள். ஒவ்வொரு தினம் ஆனதும் அவள் பெருமூச்சு விடுவாள்.

பொழுது போகாத நாட்களில் ராமாயணக் கதையைப் படிப்பாள். சீதை அசோக வனத்தில் ராமருடைய வருகையை எண்ணி எண்ணிப் பெருமூச்சு விட்டதைப் படிக்கும் போது ஜயந்திக்குச் சீதையின்மீது என்றுமில்லாத அனுதாபம் ஏற்பட்டது. தன்னைப் போலவே சீதையும் கஷ்டப்பட்டிருக்கிறாள் என்பதில் ஒரு ஆறுதலும் ஏற்பட்டது.

கடைசியில் வாசுதேவன் வந்தான். சில தினங்களுக்கெல்லாம் திரும்பிப் போக வேண்டும் என்று அவன் வந்த உடனே கூறியதைக் கேட்ட ஜயந்திக்குக் கோபம் கோபமாய் வந்தது.

"நீங்களும் கராச்சிக்கே வந்துடுங்களேன்!" என்று அவன் ஜயந்தியையும் அவள் தகப்பனாரையும் அழைத்தான். அதைக் கேட்டபோது ஜயந்தியின் கோபம் ஆத்திரமாக மாறியது. நடக்காத காரியத்தைக் குறித்துப் பேசுவதும் வற்புறுத்துவதும் ஜயந்திக்குக் கட்டோடு பிடிக்காத விஷயமாகும்.

கடைசியில் வாசுதேவன் மட்டும் தனியாகவேதான் கராச்சி சென்றான்.

ஜயந்தி பழையபடி மறுபடியும் நாளை எண்ணும் ஜயந்தி ஆனாள்.

அவளுடைய தனிமையின் வேதனை குழந்தை சூடியின் விளையாட்டினால் சற்று சகிக்கக் கூடியதாயிற்று.

* * *

வசந்த காலத்தின் சௌந்தர்யத்தினால் பூமாதேவி புது அலங்காரம் பெற்றாள். பசும்புல் நிறைந்த பச்சைத் தரைகளில் அங்கங்கே பூத்திருந்த சிறு சிறு வெண்ணிறப் பூக்கள் நீல வானத்தில் ஒளிரும் நக்ஷத்திரங்களைப் போல் காட்சி அளித்தன.

திடீரென்று ஒரு நாள் மறுபடியும் முன்னெச்சரிக்கை ஏதுமின்றி வாசுதேவன் வந்து சேர்ந்தான். அவனுடைய மாமாவும் அவனும் குதிரை வண்டியில் வந்து அடுத்த வீட்டு வாசலில் நின்றபோது ஜயந்தி ஜன்னல் வழியாகப் பார்த்தாள். அப்போது அவளுடைய கோபமெல்லாம் மறைந்து இன்ப வேதனையாக மாறியது.

சூடி, கன்றுக்குட்டியைத் தேடிவர வெளியே போயிருந்தாள். வாசுதேவன் சிறிது நேரத்திற்கெல்லாம் ஜயந்தியைப் பார்ப்பதற்காக ஆவலோடு வந்தான். ஜயந்தியினுடைய தோற்றத்தில் முன்னைவிட இன்னும் அதிக வித்தியாசம் காணப்பட்டது.

ஜயந்தி, அவளுடைய தகப்பனார், வாசுதேவன் மூவரும் சேர்ந்து சிரித்து விளையாடிப் பேசிக்கொண்டிருந்த சமயம் சூடியும் கன்றுக் குட்டியுமாகத் துள்ளித் துள்ளி உள்ளே ஓடிவந்தார்கள். சூடியின் தலைமயிர் கலைந்து முன் நெற்றியில் விழுந்திருந்தது. ஆடைகள் குலைந்திருந்தன. நெற்றிப் பொட்டில் பாதி அழிந்து போயிருந்தது.

குதித்து ஓடிவந்த சூடாமணி உள்ளே வேற்று மனிதன் உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் ஒரு கணம் செயலற்று நின்றாள். வாசுதேவன் அவளை ஆச்சரியத்துடன்

சொக்கினான். அவன் வாய் அவனையு மறியாமல் ஏதோ முணு முணுத்தன.

"சூடியா!......" என்று ஒரு கணம் வாயைப் பிளந்தான்.

அந்த வார்த்தைகள் சூடாமணியின் காதில் விழுந்தன. கண்களை அப்படியே மூடிச் சற்று நிதானித்தான். பழைய நினைவுகள் அனைத்தும் சினிமாப் படம்போல் ஞாபகத்துக்கு வந்தன.

தான் பழையபடி சின்னஞ் சிறு குழந்தையாகவே இருப்பேன் என்றும் என்னைக் கையில் எடுத்துக் கேலி செய்யலாம் என்றும் நினைத்தார் போலும் என்று எண்ணிக் கொண்டாள் சூடி.

இந்த எதிர்பாராத அசாதாரண நிகழ்ச்சியைக் கண்ட ஜயந்திக்கு ஏதோமாதிரி இருந்தது.

வெகுகாலம் வரை திறக்காமலேயே பூட்டப்பட்டுக் கிடந்த அறைக் கதவைத் திறக்கப்பட்டது போலவும், தான் அதிலிருந்து வெளிவருவது போலவும் ஒரு பிரமை தோன்றியது அவளுக்கு.

* * *

ஒரு நாள் எல்லாரும் சினிமாவுக்குப் போயிருந்தார்கள்.

மூவரும் சினிமாவில் கவனம் செலுத்தவேயில்லை. சூடாமணியும் வாசுதேவனும் வெகு நேரம் வரை ஏதேதோ பேசிக் கொண்டிருந்தார்கள். அவர்களிருவருக்குள் அப்படி என்ன பேச்சு இருக்கும் என்று ஜயந்தி எண்ணி எண்ணி வியந்து கொண்டிருந்தாள்.

சூடாமணியின்மீது அவளுக்குச் சிறிது சந்தேகம் தட்டியது. வாசுதேவன்மீது என்றைக்குமில்லாத கோபம் பொங்கி வந்தது. அதுவரை தன்னுடன் அத்தனை அந்நியோன்யமாய்ப் பழகிவிட்டு இப்போது திடீரென்று காராச்சியிலிருந்து வந்ததும் வாராததுமாய் இந்தப் பெண்ணுடன் ஏன் கொஞ்சுகிறான்? அவளுடன் பின் எதற்காக வாசுதேவன் அடிக்கடி வெளியே உலாவப் போகிறான்? வரவர வாசுதேவனுக்கும் சூடிக்கும் சிநேகம் வளர்ந்து கொண்டே போயிற்று. சூடியின் அழகில் வாசுதேவன் மயங்கிப் போயிருக்கிறான் என்ற முடிவுக்கு வந்தாள் ஜயந்தி. வாசுதேவன் தன் மீது வைத்திருந்த அன்பெல்லாம் வெறும் பாசாங்கு தானா? வாசுதேவனுக்காகத் தான் இத்தனை காலம் காத்திருந்ததெல்லாம் வீண் வியர்த்தம்தானா? தன்னைவிட சூடாமணி எந்த விதத்தில் அழகி?




ஜயந்தியின் இருதயத்தில் பெரிய கொந்தளிப்பு ஏற்பட்டது. சினிமா விட்டதும் நேராக வீட்டுக்குப் போய் விம்மி விம்மி அழுதாள். கள்ளம் கபடமற்ற சூடாமணி ஜயந்தியின் கண் சிவந்திருப்பதைக் கண்டு விட்டு, "அம்மா! ஏன் உன்

னுடைய கண் இத்தனை சிவப்பாயிருக்கிறது?" என்று கேட்டாள்.

"சினிமா பார்த்தேனல்லவா? அதனால் தான்" என்று மழுப்பி விட்டாள் ஜயந்தி.

சூடாமணி இதை உண்மையென்று நம்பினாள். சூடாமணிக்கு வேறு விவரங்கள் ஒன்றும் தெரியாது.

ஜயந்தி வாசுதேவனுக்காக ஏங்கிக் கொண்டிருக்கிறாள் என்னும் விஷயம் அவளுக்குப் போகப் போகத்தான் விளங்கியது.

ஆனால் வாசுதேவன் உண்மையில் யாரை அதிகமாக நேசிக்கிறான் என்பதை ஜயந்தி, சூடி இருவராலும் ஊகித்தறிய முடியவில்லை.

கடைசியில் ஜயந்தியின் குழப்பம் ஒருவாறு தீர்ந்தது. அவளுடைய சித்தன்னை இறக்கும் சமயம் சொல்லிவிட்டுப் போன வார்த்தைகள் அவளுடைய இருதய அந்தரங்கத்தில் எதிரொலி செய்தன.

"ஜயந்தீ, இந்தக் குழந்தையை நான் த்தனை அன்பாக வளர்ப்பேனோ, அவ்வாறே யும் காப்பாற்ற வேண்டும்."

ஜயந்திக்கு இந்த வார்த்தைகள் ஞாபகம் வந்ததும் சூடியின் மீதிருந்த கோபமும் வருத்தமும் மறைந்து அன்பும் ஆசையும் தோன்றின.

அதே சமயத்தில் உள்ளே ஊஞ்சலாடிக் கொண்டிருந்த சூடாமணி தன்னுடைய தவறான செய்கையைக் குறித்து வருத்தப்பட்டுக் கொண்டிருந்தாள். தன் தாயைப்போல் இருந்தவரும் ஜயந்தியின்மீது அவளுக்கு எல்லையிலாத அனுதாபம் ஏற்பட்டது. ஜயந்தியின் விருப்பத்துக்கு மாறாகத் தான் வாசுதேவனுடன் பழகுவதை விட்டுவிட வேண்டுமென்றும் இதுவரை அம்மாதிரி நடந்து கொண்டதற்காக ஜயந்தியிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும் என்றும் முடிவு செய்தாள்.

உடனே சத்தம் செய்யாமல் எழுந்து, வாசுதேவன் வீட்டை அடைந்தாள். வாசுதேவன் அப்போது எழுத்து வேலையில் ஈடுபட்டிருந்தான். சூடாமணியைக் கண்டதும் "எங்கே வந்தாய் சூடாமணி?" என்று ரியுடன் கேட்டான்.

சூடாமணி தான் வந்த விஷயத்தைச் சங்கோபாங்கமாகச் சொல்லி முடித்து விட்டுத் தன்னை அடியோடு மறந்து விட வேண்டும் என்று வாசுதேவனை வேண்டிக் கொண்டாள்.

"மறந்து விட்டு என்ன செய்ய வேண்டுமாம்?" என்று கேட்டான் வாசுதேவன்.

"ஜயந்தியை மணந்து கொள்ள வேண்டும்" என்றாள் சூடி.

"அது முடியாத காரியம்!" என்றான் வாசுதேவன்.

"ஏன்!" என்று கேட்டாள் சூடி.

"உன்னை மறப்பது; ஜயந்தியை மணப்பது இரண்டுமே நடக்காத காரியம்!" என்றான் வாசுதேவன். சூடாமணி பதில் பேசத் தெரியாமல் வீட்டுக்குப் போய் விட்டாள்.

அவள் சென்ற கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வாசுதேவனைத் தேடி ஜயந்தி வந்து சேர்ந்தாள்.

அவள் முகத்திலே என்றைக்குமில்லாத சோகம் குடிகொண்டிருந்தது.

வாசுதேவன் ஜயந்தியைக் கண்டதும் "நீ வந்திருக்கிற காரியம் எனக்குத் தெரியும்" என்றான்.

ஜயந்திக்குத் தூக்கி வாரிப் போட்டது. ஒரு நிமிஷம் அவளால் ஒன்றுமே நிதானிக்க முடியவில்லை.

பிறகு சமாளித்துக் கொண்டு "என்ன தெரியும்?" என்று கேட்டாள்.

"உன்னை மறந்து விட்டு சூடாமணியை மணக்க வேண்டும் என்று கேட்கத்தானே வந்திருக்கிறாய்?" என்றான்.

தன் மனதிலுள்ளதை வாசுதேவன் எப்படியோ அறிந்து கொண்டது அவளுக்கு ஆச்சரியத்திலும் ஆச்சரியமாயிருந்தது.

"ஆமாம்; அதற்காகவேதான் வந்தேன். என் பேச்சைத் தட்டக் கூடாது!" என்றாள் ஜயந்தி.

"அது முடியாத காரியம், உன்னை மறப்பதோ, சூடியை மணப்பதோ இரண்டுமே என்னால் ஆகாதம் காரியம்" என்று புதிர் போட்டான் வாசுதேவன்.

* * *

சில தினங்கள் சென்றதும்தான் வாசுதேவனுடைய இந்தப் புதிருக்கு ஜயந்தி, சூடி இருவருக்கும் விடை கிடைத்தது. வாசுதேவன் அவர்களிரண்டு பேரையும் மணக்கவுமில்லை, மறக்கவுமில்லை. அவன் அவர்களிருவர் மீதும் வைத்திருந்த அன்பு என்றென்றைக்கும் மறக்க முடியாத சிரஞ்சீவித்துவம் வாய்ந்ததாயிருந்தது. அந்த அன்புக்குப் பங்கம் வராமல் அவன் தன் மாமா நிச்சயம் செய்து வைத்த வேறொரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு வாழ்க்கையை நடத்தினான்.

# முன் யோசனை

வி. எஸ். சுந்தரராஜன்

‘அருணகிரி பாங்கி’யின் மானேஜரான திவான்பகதூர் ரத்தினசாமி ஐயர் ரொம்பவும் கெட்டிக்காரர்; பரம புத்திசாலி. முதலில் அங்கே குமாஸ்தாவாகச் சேர்ந்த மிஸ்டர் ரத்தினசாமி நாளடைவில் மேலே மேலே போய் ‘பாங்கி’யின் டைரக்டர்களில் ஒருவரான திவான் பகதூர் ரத்தினசாமி ஐயர் ஆகிவிட்டார்.

இதனிடையே ஐயருடைய ஏக புதல்வியான கமலாவும் வளர்ந்து வந்தாள். ரத்தினசாமி திவான்பகதூரானபோது, கமலாவும் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்துவிட்டுக் கல்யாணத்துக்குத் தயாரானாள். அவளுக்காக வந்த ஜாதகங்களை யெல்லாம் ‘அது சோடை’ ‘இது சப்பை’ என்று ஒதுக்கிக் கொண்டே வந்தார் ஐயர். கடைசியில் திவான்பகதூர் ஐயர் அவர்கள் தாம் புத்திசாலி என்பதை நிரூபித்தார். கமலாவுக்கும், மகாதேவன் எம். ஏ.வுக்கும் தடபடலாக விவாகம் நடந்தேறியது.

* * *

‘அருணகிரி பாங்கி’ வாசலில் ஒரே கூட்டம்; ஏகக் கூச்சல்.

கூட்டத்தில் ஒருவன், “மரியாதையாகப் பணத்தைக் கீழே வைத்து விட்டுப் போய்யா!” என்றான். மற்றவர்கள் “ஆமாம், ஆமாம்!” என்றனர்.

“உங்கள் பணம் எங்கே போய்விட்டது? நீங்கள் இப்படிக் கூச்சலிடுவது நன்றாக இருக்கிறதா?” என்றார் திவான்பகதூர்.

“யாரை ஏமாற்ற இந்த வார்த்தைகள்? பேசாமல் பணத்தை எண்ணிக் கீழே வையும்!” என்று பதில் கிடைத்தது.

“நீங்களெல்லாம் நாளைக்கு வாருங்கள். மற்ற டைரக்டர்களைக் கலந்து கொண்டு உங்கள் பணத்தைக் கொடுக்க ஏற்பாடு செய்கிறேன்” என்றார் ஐயர்.

கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாகக் கலைந்தது. பெருமூச்சு விட்டபடியே ஐயர் தம் அறைக்குச் சென்று நாற்காலியில் சாய்ந்தார். அப்போது நடந்த சம்பவத்தின் காரணம் அவருக்கு விளங்கவில்லை. காரணம், அன்று காலையில் பிரபலமான ‘சூரியாஸ்தமன பாங்கி’ திவாலான சங்கதி அவர் காதில் விழாமற் போனதுதான்!

“......என்னமோ, நாம் புத்திசாலித்தனமாக மகாதேவனுக்குக் கமலத்தைக் கொடுத்தது நல்லதாய்ப் போயிற்று. இந்த பாங்கியே மூழ்கினாலும் சரி, உலகமே மூழ்கினாலும் சரி, மாப்பிள்ளையின் ஆஸ்தி இருக்கும் வரை நமக்கென்ன கவலை!” என்று எண்ணி ஆறுதலடைந்தார் ஐயர்.

மற்ற டைரக்டர்கள் வந்தவுடன் கடையைக் கட்டுவதற்கான ஏற்பாடுகளைச் செய்து விட்டு வீடு போய்ச் சேர்ந்தார்.

* * *

அன்று மாலை “உலகத்தில் எல்லோருமே புத்திசாலிகளாயிருக்க முடியாது!” என்று கூறிக்கொண்டே வந்தான் மகாதேவன்.

“ஆமாம்!” என்று கூறி, தம் மார்பைப் பார்த்துக் கொண்டார் ஐயர்.

“பாருங்கள், இன்று காலை வரை ‘சூரியாஸ்தமன பாங்கி’ திவாலாகப் போகிறது என்று யாருக்காவது தெரிந்திருக்குமா?”

அவ்வளவுதான்; “ஐயையோ! நீ கூட அதில்தானே பணம் போட்டிருந்தாய்?” என்று அலறினார் ஐயர்.

மாப்பிள்ளை சிரித்துக் கொண்டே “அதற்குத்தான் மாமா, ‘உலகில் எல்லோருமே புத்திசாலிகளாயிருக்க முடியாது!’ என்றேன். இன்று இந்த கதி வரும் என்பதை அறிந்து ஒரு வாரத்திற்கு முன்பே நான் என் பணத்தை அங்கிருந்து வாங்கிவிட்டேனே!” என்று பெருமையுடன் சொன்னான்.

மாப்பிள்ளையைப் பற்றிய பெருமை ஐயருக்கு அளவு கடந்து போயிற்று. பற்களைக் காட்டிய வாறே, “பணத்தை என்ன செய்தாய்?” என்று கேட்டார்.

“வேறு என்ன செய்வார்கள்? உங்கள் பாங்கியில் போட்டு விட்டேன்!......என்ன என்ன, மாமா? ஏன் அப்படி விழிக்கிறீர்கள்?” என்று முடிப்பதற்குள், ஐயர் மூர்ச்சையானார்!

மகாதேவனுக்கு விஷயம் புரியவில்லை. அப்போது வாசலில் பத்திரிகை விற்றுக் கொண்டு போன பையன், “அருணகிரி பாங்கி திவாலானது! — “தினகரன்” — ஓரணா!” என்று கூவினான்.

# காலக்ஷேபம்

## பாத்திரத்தின் விலை!

திருடன் ஒருவன் ஒரு பாத்திரத்துடன் கரு விடம் வந்தான்.

திருடன்:—இந்தப் பாத்திரத்தைச் செப்ப ட்டுத் தருகிறீரா?

கருமான்:—தருகிறேன்! அதற்குக் கூலி பாத் ரத்தின் விலையைவிட இரண்டு பங்கு டுக்க வேண்டும்.

திருடன்:—ஆஹா! அப்படியே! ஒரு உதை டுத்துத்தான் இதை வாங்கினேன். க்கும் அதில் இரண்டு கொடுக்கிறேன்.

—ஏ. தண்டபாணி.

★

## லாப நஷ்டம்!

வியாபாரியை இரண்டு வருஷம் கழித்து நண்பர் சந்தித்தார்.

நண்பர்:—எப்படி ஐயா வியாபாரம்?

வியாபாரி:—இந்த வருஷம் இரண்டாயிரம் ல் லாபம்.

நண்பர்:—இரண்டாயிர ரூபாயா? ஆச்சரிய க இருக்கிறதே!

வியாபாரி:—முதல் வருஷம் நாலாயிர ரூபாய் டம். இந்த வருஷம் இரண்டாயிரம் ரூபாய் டம். பாக்கி இரண்டாயிரம் ரூபாயை பம் என்றுதானே எண்ணவேண்டும்.

—கே. வி. ஆர்.

★

## இரண்டும் ஒன்றே!

மனைவி:—இன்று ஒரு குடுகுடுப்பைக்காரன் ந்து பழைய துணி ஏதாவது இருந்தால் டுங்கள் என்று கேட்டான்.

கணவன்:—ஏதாவது கொடுத்தாயா?

மனைவி:—பத்து வருஷத்துக்கு முன்பு வாங் உங்கள் கோட்டையும், போன வருஷம் ங்கிய என் பழைய புடவையையும் டுத்து அனுப்பினேன்! —கே. ராமசாமி.

★

## பயப்படாது!

தோட்டக்காரன்:— எஜமான், சோளக் ல்லைப் பொம்மைக்குப் போட, ஒரு பழைய ட்டு வேணும், தாரீங்களா?

எஜமானர்:—(உள்ளே சென்று ஒரு பழைய ட்டை கொண்டு):—வந்து இது போது டா?

தோட்டக்காரன்:— என்னுங்க எஜமான்! ன் காக்காய்களுக்குப் பயம் காட்டுவ கக அல்லவா கோட்டு கேட்டேன்? துங்க இதைப் பார்த்துவிட்டுச் சிரிப்பாச் க்கும் போலிருக்குதுங்களே!

—சேதுராமன்.

## பந்தயம் என்ன?

ராமு:—இனிமேல் நான் எந்தப் பந்தயத்துக்கும் போகப் போவதில்லை.

சோமு:—உன் பேச்சை நம்ப முடியாது?

ராமு:—போகாமல் இருக்கிறேன்! என்ன பந்தயம் கட்டுகிறாய் இப்போ?

—டி. எஸ். சுப்புஸ்வாமி.

★

## அவரேதான்!

நடுரோட்டில் ஒருவர் மீது வண்டி ஏறி, அவர் கீழே விழுந்து விட்டார். கூட்டம் கூடியது. பக்கத்தில் இருந்தவர், "நல்ல வேளை! எதிர்த்தாற்போலவே டாக்டர் வீடு இருக்கிறது......"

அடிபட்டவர் (வலியுடன்):—ஐயோ! அந்த டாக்டரே நான்தானே?

எம். பி. துரைசாமி.

★

## செலவு வேண்டாம்!

மனைவி:—நான் ஊருக்குப் போய்ப் பார்க்கிறேன். அம்மா என்னை ரொம்பக் கட்டாயப் படுத்தினால், கூட நாலு நாள் இருந்துவிட்டு வருகிறேன். அப்படித் தங்கும்படி நேர்ந்தால் ஒரு கடிதம் போடுகிறேன்.

கணவன்:—என்னத்துக்காக நீ வீணாய்க் காசைச் செலவழித்துக் கடிதம் போடவேணும்! அந்தக் கடிதத்தை நான் இங்கேயே படித்துப் பார்த்துவிட்டேன். உன் பெட்டிக்குள் இருந்தது!

—எஸ். வைத்தீஸ்வரன்.

★

## எந்த இடம்?

நண்பர்:—இந்த மாசத்திற்குள் நம்ப பெண்ணுக்குக் கலியாணத்தை நடத்தி விடலாம்னு பார்க்கிறேன். உங்களுக்குத் தெரிந்த நல்ல இடம் ஏதாவது வந்ததுன்னா சொல்றேளா?



மற்றவர்:—ஆகா! இப்பக்கூட ஒரு இடம் இருக்குன்னு கேள்விப்பட்டேன். அது தான், நம்ப 'கருப்பட்டி' சத்திரம் காலியாகத்தான் இருக்கிறதாம். பெரிய பெரிய கலியாணங்களெல்லாம் அங்கே நடந்திருக்கின்றன, பார்க்கிறீர்களா? —எம். பி. நீலகண்டம்.

# ஒற்றுமை எப்படி?

**சோமாஸ்**



"கமலா, உனக்கு என்ன கோபம்? ஏன் சரியாகப் பேசமாட்டேன் என்கிறாய்? உனக்கு எங்கேயாவது போவதாயிருந்தால் அப்பொழுதுதான் கோபம் வந்து விடுகிறது!" என்றான் மூர்த்தி.

"எனக்கு ஒன்றும் கோபமில்லை. நான் எப்போதும் போல்தான் இருக்கிறேன். நீங்கள்தான் எடுத்ததற்கெல்லாம் என்னிடம் கோபித்துக் கொள்கிறீர்கள். என்னை எங்கே யெல்லாம் அழைத்துக் கொண்டு போயிருக்கிறீர்கள்? வெளியே எங்கேயாவது போகும்போ தெல்லாம் எனக்குக் கோபம் வந்து விடுகிறது என்கிறீர்களே! என்னமோ இரண்டு சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போனீர்களாக்கும்! இதைத் தவிர நாம் இரண்டு பேருமாக எங்கே போயிருக்கிறோம்?" என்றாள் கமலா. அவள் குரலில் இப்பொழுது கொஞ்சம் அழுகை கலந்திருந்தது.

"கமலா, வீணுக்கெல்லாம் நீ வருத்தப் படுகிறாய்! அழாதே, வா. ஸ்ரீதரன் ஒரு தடவைக்கு ஒன்பது தடவையாக 'அவளையும் அழைத்துக் கொண்டு வா! நீ மாத்திரம் கையை வீசிக்கொண்டு வந்து நிற்காதே!' என்று நேற்றைக்கு ரொம்ப தூரம் சொன்னான். சீக்கிரம் டிரஸ் பண்ணிக்கொண்டு புறப்படு. பத்து மணிக்கெல்லாம் இலை போட்டு விடுவார்கள்!" என்றான் மூர்த்தி.

"நான் வரவில்லை. நீங்கள் போய்விட்டு வாருங்கள்."

"நீ ஏன் வரவில்லை? கோபமா?"

"எனக்கு ஒன்றும் கோபமில்லை. நீங்கள்தான் அப்பா ஏதோ கடிதம் எழுதினார் என்று கோபித்துக் கொண்டு என்னோடு சரியாய்ப் பேசாம



லிருக்கிறீர்கள். பத்து நாட்களுக்கு பே
ஆகிறது நீங்கள் கலகலப்பாகப் பேசி
என்றாள் கமலா.

"ஆமாம். உன் அப்பா கோபத்தி
எதை வேண்டுமானாலும் எழுதலா
நான் பொறுத்துக்கொண்டு போகவு
இல்லையா? சரி. அதையெல்லாம் இ
பொழுது ஏன் எடுக்கிறாய்? நான்தா
ஏதோ கோபித்துக் கொண்டிருந்தே
என்றால் அதை நீ சொல்லிக்காட்டி
வேண்டுமாக்கும்!" என்றான் மூர்த்தி.

"நான் ஒன்றும் சொல்லிக்காட்
வில்லை. அப்பா ஏதோ கோபமாகக்
தாக எழுதினால் அதை வைத்து
கொண்டு என்னை என்ன பாடு படுத்
விட்டீர்கள்?"

"சரி, கமலா! நீ வேண்டுமென்
சண்டைக்கு ஆரம்பிக்கிறாய். சென்
போன விஷயங்களை யெல்லாம் எதற்க
எடுக்கிறாய்? நாழிகையாகி விட்டது.
சீக்கிரம் புறப்படு. ஸ்ரீதரனும் அ
மனைவி சீதாவும் எவ்வளவு அன்
யோன்யமாக இருக்கிறார்கள் தெரியும
நேரில் பார்த்தால்தான் உனக்கு
தெரியும்."

"ஆமாம், சீதாவின் வார்த்தைக
அவள் அகத்துக்காரர் எதிர் வார்த்
பேசுவதில்லை.
களைப் போல
எடுத்ததற்கெல்
புகார் சொல்
கொண்டிருக்கிற
அவர் வீட்டில் சீ
வைத்ததுதான்
டம்!"

கமலா இப்ப
சொன்னதும் ஸ்ரீத
முகம் கோபம
மாறிவிட்டது.

"பேஷ்! நா
நீ சொன்னபடி எ
லாம் ஆடிக்கொ
டிருந்தால் நா

அன்னியோன்யமா யிருக்கலாம் என்கிறுளாக்கும்!'' என்று கூறும் பொழுதே மூர்த்தியின் மூக்கு கோபத்தினல் துடிதுடித்தது.

★

மூர்த்தியின் சுபாவம் தெரியுமாதலால் அதற்குமேல் கமலா ஒன்றும் பேசவில்லை. இருவரும் பேசாமல் பஸ் ஸ்டாண்டுக்குச் சென்று மயிலாப்பூர் பஸ்ஸில் ஏறி ஸ்ரீதரன் வீட்டை யடைந்தனர்.

வீட்டு வாசற் கதவைத் தட்டப்போன மூர்த்தி மாடிமேல் இரைந்து பேசும் குரல் கேட்டு ஆச்சரியத்தினல் அப்படியே சற்று நின்றான். கமலாவும் கற்சிலைபோல் பக்கத்தில் நின்றாள்.

"சீதா, நீ என்ன எப்பொழுது பார்த்தாலும் இப்படிப் பண்ணுகிறாய்? உன்னை என்ன சொல்லி விட்டேன்? எதற்காக வீணாக அழுகிறாய்? மூர்த்தியும் அவன் மனைவியும் இப்பொழுது வந்து விடுவார்கள். அவர்களுக்கு எதிரில் நீ கண்ணைக் கசக்கிக் கொண்டு நிற்காதே! அவளிடம் நம் ஒற்றுமையைப் பற்றிப் பிரமாதமாகச் சொல்லியிருக்கிறேன். மூர்த்தியும் அவன் மனைவியும் ரொம்ப ஒற்றுமை. ஆபீஸில் மூர்த்தி தன் மனைவியைப் பற்றிப் பேசிப் பூரிக்காத நாள் கிடையாது. மூர்த்தியின் மனைவிதான் என்ன பதவிசு! இப்பொழுது அவர்கள் வரப் போகிறார்கள். நீயே பாரேன். நாம் எலியும் பூனையுமாக இருப்பது அவர்களுக்குத் தெரிந்தால் ரொம்பவிரஸமாய்ப் போய் விடும்!''

"நாம் என்ன எலியும் பூனையும் போலவா இருக்கிறோம்? நான் என்ன உங்களிடம் பதவிசாக நடந்து கொள்ளவில்லையா? எதிர்த்த வீட்டு ருக்மிணி அம்மாமி என்னுடைய சாந்தமான சுபாவத்தைப் பற்றிப் பேசாத நாள் கிடையாது. உங்களுக்கு வேண்டுமானுல் நான் அடக்க மில்லாதவளாக இருந்து விட்டுப் போகிறேன்! உங்கள் சிநேகிதர் சமாசாரம் உங்களுக்குத் தெரியாது. எல்லாம் அவர்கள் மாதிரி யிருந்தால் யார்தான் ஒற்றுமையா யிருக்க மாட்டார்கள்? கமலாவின் வார்த்தைக்கு உங்கள் சிநேகிதர் மறு வார்த்தை பேசுவது கிடையாது. அந்த வீட்டில் கமலா வைத்தது தான் சட்டம்! எல்லாம் எனக்குத் தெரியாதாக்கும்!'' என்று கோபத்துடன் சீதா கூறியதைக் கேட்ட கமலா 'களுக்' என்று சிரித்து விட்டாள். மூர்த்திக்கும் சிரிப்பு வந்து விட்டது. சிரிப்புச் சத்தம் கேட்டதும் ஸ்ரீதரனும் சீதாவும் மாடியிலிருந்து எட்டிப் பார்த்தனர்; மூர்த்தியையும் சீதாவையும் கண்டதும் சிரித்துக் கொண்டே இறங்கி வந்து அவர்களை வரவேற்றனர்.




"ஏய்! வாடகை மட்டும் வாங்க வந்து விட்டீரோ? எங்கே பார்த்தாலும் ஒழுகறது; நான் இந்த மாதத்தோடு காலி பண்ணிடப் போகிறேன்."



# எங்கும் குதூகலமான வரவேற்பு..

சென்ட்ரல் ஸ்டுடியோஸ்

# வால்மீகி

4-5-46

முதல்

4வது வாரம்

சென்னை ...... [illegible]
பெங்களூர் ...... சிவாஜி
கோயம்புத்தூர் ...... கர்னாடிக்
ப டைமண்ட்
...... வெல்லிங்டன்
திருச்சி ...... நியூ சினிமா
சேலம் ...... நியூ [illegible]
மைசூர் ...... டைமண்ட்
கும்பகோணம் ...... நடராஜா
காரைக்குடி ...... தாஜ்
வேலூர் ...... கிருஷ்ணா
காஞ்சீபுரம் ...... ரத்னா
பாண்டிச்சேரி ......
அண்டர்சன்பேட் ...... மாடர்ன்

மதுரை ராமநாதபுரம்
திருநெல்வேலி
புதுக்கோட்டை
ராயல் டாக்கி
டெம்பிள் டவுன், மதுரை
ரூபி பிக்சர்ஸ் சர்க்யூட்

ஜூபிடர் ரிலீஸ்

ஜூபிடர் பிக்சர்ஸ் சர்க்யூட், மதராஸ் & திருப்பூர்




வெங்கடலட்சுமி

பச்சைப் பசேலென்று கண்ணுக் கெட்டிய தூரம் வரையில் விரிந்து கிடந்த வயற்பரப்புக்களின் நடுவே சற்று மேட்டுப் பாங்கான இடத்தில் தனது குடிசையை அமைத்துக் கொண்டிருந்தான் முருகப்பன். அந்தக் குடிசையின் கூரைமீது பறங்கியும் சுரையும் கொடியேறிப் பின்னிப் பிணைந்து கிடந்தன.

குடிசைக்குப் பின்னாலிருந்த காலி மனையில் வெண்டை, கத்திரி முதலிய காய்கறிச் செடிகளும், கீரைப் பாத்திகளும் இருந்தன. தன் பேத்தி கண்ணம்மாவுக்கு அடுத்தபடியாக அந்தச் செடிகளை வைத்துப் போற்றி வந்தான் முருகப்பன்.

கண்ணம்மா ஒரு வயதுக் குழந்தையாயிருக்கும் பொழுதே அவள் தாயார் இறந்து விட்டாள். அவளுடைய கணவன் — அதாவது, முருகப்பனின் மகன்—பெருந்த குடிகாரன். கண்ணம்மா ஐந்து வயதுக் குழந்தையாயிருக்கையில், குடிவெறியில் யாரையோ குத்திக் கொன்று விட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டு அவன் தீவாந்தரச் சிட்சை யடைந்து விட்டான். மனமுடைந்த முருகப்பனின் வாழ்க்கையை இருள் மூடியது. அவ்விருளில் சின்னஞ்சிறு விளக்கு போல் திகழ்ந்தாள் குழந்தை கண்ணம்மா.

அன்று மாலை வழக்கம்போல் குளித்துவிட்டுக் கூழ் குடித்துக் கொண்டிருந்த முருகப்பன் கீரைக் குழம்பை ருசி பார்த்துக் கொண்டே, "கீரை ரொம்ப ருசியாயிருக்கு, கண்ணம்மா! குடிசைக்கு மேலண்டை போட்டிருக்கேனே, அந்தப் பாத்தியிலிருந்தா கிள்ளினே?" என்று கேட்டான்.

"இது நம்ம வீட்டுத் தோட்டத்துக் கீரையில்லே, தாத்தா! கண்டியிலேயிருந்து வந்து மேலண்டை மனையை வாங்கியிருக்காங்களே, அவுங்க வீட்டுத் தோட்டத்துக் கீரை!" என்றாள் கண்ணம்மா.

கிழவன் சாப்பிடுவதை நிறுத்திவிட்டு, "அவுங்க வீட்டுத் தோட்டத்துக் கீரை உனக்கு ஏது? ஆறுமுகம் கொண்டுவந்து கொடுத்தானா?" என்று கேட்டான்.

"ஆமாம்" என்று அரை குறையாகப் பதில் கூறிவிட்டு அவனுக்குக் கைகழுவ ஜலம் கொடுத்தாள் கண்ணம்மா.

கிழவன் கையைக் கழுவிக் கொண்டு வெளியே வந்து உட்கார்ந்தான். அவனுடைய எண்ணமெல்லாம் ஆறுமுகத்தைப் பற்றியதாகவே இருந்தது. இரண்டொரு தடவை அவன் தன் வீட்டு வேலியோரமாக வந்து நின்று, கண்ணம்மாளிடம் பேசிக் கொண்டிருந்ததைக் கிழவன் பார்த்திருக்கிறான். அதுவே அவனுக்குப் பிடிக்கவில்லை. "நேற்றைய தினம் கீரை கொண்டு வரும் சாக்கில் அவன் வீட்டுக்குள்ளேயே வந்திருக்கிறான் போலிருக்கிறது! இது விஷயத்தில் கண்ணம்மாளைக் கண்டிப்பதா, வேண்டாமா?" என்றெல்லாம் எண்ணினான் கிழவன்.

★

மறுநாள் வழக்கம்போல் கறிகாய்க் கூடையைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டு சந்திவாத்தை நோக்கிக் கிளம்பினாள் கண்ணம்மா. அவளுடைய நடையில் ஒரு அலாதியான விறுவிறுப்புத் தென்பட்டது. இடையில் தொம்பப் பாவாடையும் மேலே சிட்டித் தாவணியும் அணிந்திருந்தாள். கையிலிருந்த கண்ணாடி வளையல்கள் கல கல வென ஒலி செய்ய, காட்டு மானைப் போல் அவள் துள்ளித் துள்ளி நடந்தாள்.

"கண்ணம்மா! கண்ணம்மா!"

திரும்பிப் பார்த்தான் அவன். அங்கிருந்த வாய்க்கால் கரையில் உட்கார்ந்தபடி பல் தேய்த்துக் கொண்டிருந்தான் ஆறுமுகம்.

கண்ணம்மாளின் முகம் சிவந்தது. ஒரு கையால் கூடையைத் தாங்கியபடியே தரையைக் கீறிக் கொண்டு நின்றாள்.

"எங்கே போறே? சந்தியாத்துக்கா?" என்று கேட்டான் ஆறுமுகம்.

"ஆமாம்!" என்று ஓரடி எடுத்து வைத்தாள் கண்ணம்மா.

"என்ன, அம்மா அவசரம்?"

"வெய்யில் ஏறுகிறதுக்குள்ளே திரும்பி வந்து தாத்தாவுக்குச் சோறாக்க வேணாமா?" என்று மேலே நடந்தாள் கண்ணம்மா. அவள் தலையில் வைத்திருந்த மருக்கொழுந்தின் மணம் காற்றிலே கலந்து வந்தது. ஆறுமுகம் தன்னுடைய கையிலிருந்த வேப்பங் குச்சியை அப்பால் வீசி எறிந்து விட்டு அவளைப் பின் தொடர்ந்தான்.

"என்னோட என்னாத்துக்கு வரே? உங்க அப்பாரு பாத்தா ஏதாச்சும் சொல்லுவாரு!" என்று மயக்கும் விழிகளால் அவனை நோக்கினாள் கண்ணம்மா.

ஆறுமுகம் பேசாமலிருந்தான். அவன் பதில் சொல்லாமலிருந்தது கண்ணம்மாளுக்கு வேதனை அளித்தது.

இந்த நிலையில் இருவரும் கிராமத்தைச் சமீபித்து விட்டார்கள். அங்கேயிருந்த சுமை தாங்கியண்டை வந்ததும் தலையிலிருந்த கூடையை இறக்கி அதன் மேல் வைத்து விட்டு, முகத்தில் துளித்த வியர்வையைத் துடைத்துக் கொண்டாள் கண்ணம்மா. அவளுடைய நெற்றியில் புரண்ட சுருண்ட கூந்தலை நோக்கிய வண்ணம் தன்னை மறந்து நின்றான் ஆறுமுகம்.

இந்த விஷயம் எப்படியோ பொன்னையன் காதில் விழுந்து விட்டது. அவன் அன்றிரவு தன் மகனை வாயில் வந்தபடி திட்டிக் கொண்டிருந்தான். சற்று நேரம் மௌனமாக நின்றபடியே எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த ஆறுமுகம், "என்னத்துக்கு இம்மாம் சச்சரவு பண்றே? எனக்கு உன்னுடைய பணமும் வேணாம், ஒண்ணும் வேணாம்! அந்தப் பெண்ணைத் தான் நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போறேன்!" என்றான்.

பொன்னையன் பொங்கி வந்த கோபத்தை அடக்கிக் கொண்டான். சற்றுப் பொறுத்து அவன் வெற்றிலை போட்டுக் கொண்டு திண்ணையில் உட்கார்ந்திருக்கையில், ஆறுமுகம் தோளில் துண்டைப் போட்டுக் கொண்டு கண்ணம்மாவின் குடிசையை நோக்கிப் போவதைக் கண்டான்.

*

"தாத்தா!" என்றாள் கண்ணம்மா. அவளுடைய குரல் கம்மி யிருந்தது.

ஆட்டைத் தடவிக் கொடுத்த வண்ணம் உட்கார்ந்திருந்த முருகப்பன் அவளை நிமிர்ந்து பார்த்தான்.

"கொஞ்ச நேரத்துக்கு முன்னே ஆறுமுகம் இங்கே வந்திருந்திச்சு!" என்று ஆரம்பித்தாள் அவள்.

கிழவனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. "உம்......" என்று மௌனமாயிருந்தான்.

"என்னைக் கல்யாணம் பண்ணிக் கிட்டா வீட்டை விட்டுத் துரத்திப்பிடுவேன்னு அதுக்க அப்பன் சொல்லுதாம். அது மட்டும் என்னைத்தான் கல்யாணம் பண்ணிக்கப்



போவுதாம்! 'உனக்குச் சம்மதமா?'ன்னு அது என்னைக் கேட்டுது!" என்றாள் கண்ணம்மா.

அப்போது அவனுடைய மார்பு படபட வென்று அடித்துக் கொண்டது. கிழவன் திடுக்கிட்டான். பல வருடங்களுக்கு முன்னால் நடந்த சம்பவங்கள் அவன் மனக் கண்முன் தோன்றின.

"நான் சொல்றதைக் கவனமாக் கேளு, கண்ணம்மா! அந்த ஆறுமுகத்தினுடைய அப்பன் பொன்னையனை எனக்கு இருபது வருஷமாத் தெரியும். அவனும் இந்த ஊர்க்காரன்தான். உன்னுடைய அப்பன் சின்னப் பையனா இருக்கச்சே, அவுங்க ரெண்டு பேரும் பெரிய சிநேகிதக்காரனுங்க! இப்பத்தான் அவன் கண்டியிலே யிருந்து பணம் சம்பாதிச்சிக்கிட்டு வந்திருக்கான்; அப்போதெல்லாம் அவனும் ஏழைதான்! எனக்கு எப்பவுமே அவனைப் பார்த்தா பிடிக்காது. உன் அப்பன் குடிக்கக் கிடைக்கக் கத்துக்கிட்டதெல்லாம் பொன்னையன் கிட்டத்தான். 'அந்தப் பாவியுடன் சேராதே!'ன்னு எவ்வளவோ சொன்னேன், அவன் கேக்கலே! கடைசியிலே பெரிய கல்லைத் தூக்கி என் தலையிலே போட்டான், பாவி! ரெண்டு பேரும் ஒரே பெண்ணைக் கல்யாணம் பண்ணிக்கனும்னு போட்டி போட்டாங்க! உன் அம்மா இருந்தாளே, அவள் இந்தப் பொன்னையனைக் கட்டிக்க மாட்டேன்னு சொல்லி விட்டா! அதனாலே உன் அப்பனுக்கும் அவளுக்கும் கல்யாணம் ஆனதிலே யிருந்து அவன் கருவிக்கிட்டே இருந்தான். அது திருட்டுப் பயல் வெளிக்கு மட்டும் முன்மாதிரியே யிருந்தான். எனக்கு மட்டும் சந்தேகந்தான். பொன்னையன் உன் அப்பன் தலைக்கு ஏதாச்சும் தீம்பு கொண்டு வருவான்னு! அப்படியே பண்ணிவிட்டான். எவனோ செஞ்ச கொலையை லஞ்சம் வாங்கிக்கிட்டு உன் அப்பன்தான் செஞ்சான்னு பொய்ச் சாட்சி சொன்னான். கோர்ட்டாரும் அதை நம்பி உன் அப்பனைத் தீவாந்தரத்துக்கு அனுப்பி வைச்சிட்டாங்க! அதே கவலையாகத்தான் உன் அம்மா செத்தா! அப்புறம் நான் பொன்னையனைப் பார்க்கவே யில்லே. தீவாந்திரத்திலே யிருந்தா நான் பழி வாங்கினாலும் வாங்கிடுவேன்னு நாயோடு நாயா கண்டிக்கு ஓடி விட்டான்!"



முருகப்பனின் தொண்டை அடைத்துக் கொண்டது; கண்ணம்மாளின் விழிகளில் நீர் நிரம்பியது.

★

இந்தச் சம்பவம் நடந்த இரண்டு நாட்களுக்குப் பிறகு முருகப்பன் ஏதோ எண்ணித் துணிந்தவனாகப் பொன்னையனுடைய வீட்டை நோக்கிச் சென்றான். அவனுடைய முகம் கவலையினால் வாடி யிருந்தது. கண்ணம்மாளுக்கு இரண்டு நாளாக நல்ல ஜுரம். கண்ணைத் திறவாமல் படுத்த படுக்கையாய்க் கிடந்தாள். குடிசையில் கலகலப்பே இல்லை.

கிழவன் பொன்னையனுடைய வீட்டிற்குள் நுழையும் பொழுது உள்ளே யிருந்து 'லொக் லொக்'கென்று இருமும் சத்தம் கேட்டது. காலிலிருந்து தலைவரை போர்த்திக் கொண்டு படுத்திருந்த பொன்னையன் முருகப்பனைக் கண்டதும், "வாங்க, வாங்க!" என்று உபசரித்துக் கொண்டே எழுந்து உட்கார்ந்தான்.

"என்ன உடம்புக்கு?" என்று அவனை விசாரித் தான் முருகப்பன்.

"ரெண்டு நாளா ஜுரம்; இருமல் வேறே ராப்பகலாக் கொல்லுது!"

"கண்ணம்மாவுக்கும் ஜுரம்தான்! உன்கிட்ட ஏதாச்சும் மருந்து இருந்தா வாங்கிக்கிட்டுப் போகலாம்னு வந்தேன்!" என்று கூறிவிட்டுச் சுற்றுமுற்றும் பார்த்தான் முரு



கைதிகளில் ஒருவன் (மற்றவனைப் பார்த்து):—ஏய்! இந்தப் போலீஸ்காரங்க இப்படிச் சண்டை போடறாங்க; நீ சும்மா பார்த்துக் கொண்டு நிற்கிறயே! இரண்டு அதட்டல் போடப்பா, சண்டையை நிறுத்தட்டும்!

கப்பன். பிறகு, "அவன் எங்கே? உன் மவன்?" என்று கேட்டான்.

"அவனா? அதை ஏன் கேட்கிறே? அன்னைக்குக் கோபத்திலே ரெண்டு வார்த்தை சொன்னாலும் சொல்லி விட்டேன்; அதுக்காக ரெண்டு நாளா அவன் இந்த வீட்டுப் பக்கமே வரல்லே!"

"ஹும்.........அப்படியா சமாசாரம்?—ஆமாம், பொன்னையா! நான் ஒண்ணு சொல்றேன், கேக்கிறியா?"

"சொல்லுங்க; கேக்கிறேன்!"

"இதோ பாரு! முன்னே நடந்ததையெல்லாம் இப்போ ரெண்டு பேரும் மறந்துடுவோம். உனக்கும் ஒரே மவன், எனக்கும் ஒரே பேத்தி. ரெண்டும் சந்தோசமா யிருக்கிறதை நாம் ஏன் கெடுக்கணும்?"

இதைக் கேட்டதும் திகைத்துப் போனான் பொன்னையன். இரண்டு நாளாக அவன் மனதிலும் இதே எண்ணம்தான். ஆனால், தன்னுடைய குற்றத்தை முருகப்பன் மன்னித்து விடுவான் என்று அவன் கனவிலும் கருதவில்லை. ஆகவே, இப்போது கேட்க வேண்டுமா? "அதற்கென்ன, அப்படியே செஞ்சுட்டாப் போச்சு!" என்றான் பொன்னையன்.

கிழவனுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. "நான் வரேன்!" என்று தன் குடிசையை நோக்கி நடையைக் கட்டினான்.

★

பொங்கல் புது நாளன்று பொன்னையனுக்கும் அவன் மகனுக்கும் முருகப்பன் வீட்டில் விருந்து நடந்தது. கண்ணம்மா விதம் விதமாகச் சமைத்திருந்தாள். சாப்பாட்டிற்குப் பிறகு, "இந்த மாசக் கடைசிக்குள்ளே கல்யாணத்தை முடிச்சிடலாமில்லே?" என்று கேட்டான் பொன்னையன்.

"அதுதான் நல்லது!" என்றான் முருகப்பன்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த ஆறுமுகம் ஜாடையாக எழுந்து உள்ளே போனான். அப்போது கண்ணம்மா சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். "நல்லவேளையா உன் தாத்தா என் அப்பனை எப்படியோ மன்னிச்சிடுச்சு!" என்றான் ஆறுமுகம்.

"அது உன் அப்பனை மன்னிச்சா மட்டும் போதுமா? நான் உன்னை மன்னிக்க வேணுமா?" என்று கேட்டுவிட்டுக் 'களுக்' கென்று சிரித்தாள் கண்ணம்மா.

"நீதான் எப்பவோ என்னை மன்னிச்சுட்டியே!" என்று சிரித்தான் ஆறுமுகம்.

இருவரும் சேர்ந்து சிரித்தது வெளியே இருந்த இருவர் காதிலும் விழுந்தது.

★ ○ ★

# இரண்டாவது பரிசு!

இங்கிலாந்தில் கிறிஸ்துமஸ் கொண்டாட்டத்திற்காக ஒரு போட்டிப் பந்தயம் வைத்தார்கள். அந்தப் பந்தயத்தில் பிரபல ஹாஸ்ய நடிகரான சார்லி சாப்ளினைப்போல் நடிப்பவருக்குப் பரிசு ஒன்று கொடுப்பதாகத் தீர்மானித்திருந்தார்கள். மேற்படி போட்டியில் பல பேர் கலந்து கொண்டார்கள். அதில் இரண்டாவது பரிசு பெற்றவர் யார் தெரியுமா?—சார்லி சாப்ளின்தான்!



# சமாதானகாலத்திலும்

ஆறு வருஷ கடுமையான யுத்த காலத்தைக்கடந்து விட்டோம். தூக்கவிட நேரமின்றி முழு வேலை செய்த வருஷங்கள். ஈவிரக்கமின்றி உயிர், பொருள் நாசமடைந்த நாட்கள். அப்பாடா! எத்தனைய மன ஆறுதலுடன் களைப்புற்ற உலகம் சமாதானத்தை நிலைநிறுத்தி, புனர் நிர்மாண வேலைகளைத் தொடங்குகிறது. இதுவும் சிரமமான வேலைதான். இப்பொழுதுதான் நமது நன்மைக்கு பாடுபடுகிறோம்; படும் சிரமத்துக்கும் தக்க பலனுண்டு.



# யுத்தகாலத்திலும்



போர் வீரர்களுக்கு ஊக்கமளித்து வந்த டீ, சமாதான நாட்களிலும் தன் சேவையைச் செய்ய பின்வாங்காது. டீயை நம்புங்கள்; உற்ற சமயத்தில் உதவும் நண்பன் அது: களைப்புற்று கவலையுடன் ஊக்கமிழந்து சோர்வுற்றிருக்கும் வேளையில் டீயைப் போன்ற சோர்வகற்றும் பானம் வேறெதுவுமில்லை. மனித சமூகத்தின் முன்னேற்றத்துக்கு பாடுபடும் உங்களுக்கு டீயும் தன் உதவியைச் செய்ய பின்வாங்காது.

# டீயை நம்புங்கள்



இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது.

# இந்தியத் தேயிலையில் மிகச் சிறந்தது



மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் வெள்ளை லேபில் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ்

## வெள்ளை லேபில்

நேர்த்தியான இந்திய தேயிலை

LTK 84 W

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 140. மறக் கருணை

கரனது சேனைத் தலைவனான திரிசிரா போர் செய்ய வந்தான். ராமனது கணைகளால் தேர் அழிந்தது. இரண்டு கிரீடமும் விழுந்து விட்டன. அப்பொழுது அவன், "திரிசிரா அல்ல; ஒரு சிரா தான்!" என்று சொல்லும்படியாகிவிட்டான்.

அது காரணமாக அவனுக்கு அவமானமும் ஆங்காரமும் மேலிட்டன. உடனே அம்பு மழை என்று சொல்லும்படி அம்புகளை எய்தான்.

பார்த்தான் ராமன்: கோபாவேசம் உண்டாய் விட்டது. நெற்றி ஏறிட்டது. ஏதோ நீல மேகம் ஒன்று வில்லை ஏந்திக் கொண்டு ஒரு எதிரியைத் தொடர்ந்து செல்வது போல் இருந்தது, ராமன் திரிசிராவைத் தொடர்ந்து சென்ற காரியம்!

ஏற்றிய நுதலினன்
இருண்ட கார்அனான்
தோற்றிய வில்லொடும்
தொடர, மீமிசைக்
காற்றிடை அழிந்தெனக்
கார்மு கத்தையும்
மாற்றரும் பகழியால்
அறுத்து மாற்றினான்

[ஏற்றிய நுதலினன்: நெறித்து ஏறிய நெற்றியோடு: இருண்ட கார் அனான்: நீல மேகம் போன்ற ராமன்: தோற்றிய வில்லொடும் தொடர: முன்னேறித் தோன்றும்படியாக வில்லை ஏந்தி: மீமிசைக் காற்றிடை அழிந்தென: ஏதோ ஆகாயத்திலிருந்து வந்த புயல் காற்றினால் நொறுங்கி விட்டது என்று சொல்லும்படி அவ்வளவு ஜடிதியாக; கார்முகத்தையும்: திரிசிராவின் கையிலிருந்த வில்லையும்: மாற்றரும் பகழியால் அறுத்து மாற்றினான்: தடுக்க முடியாத அம்பினால் அறுத்து விறகுத் துண்டமாக ஆக்கினான்.]

என்ன செய்வான் திரிசிரா! வில்லே நொறுங்கிப் போய் விட்டது.

வில் அழிந்துபோயுங்கூட, அவனுடைய வீரப் பார்வை குறைய வில்லை. முகத்திலிருந்து வீராவேசம் அகல வில்லை. கோபம் குறைய வில்லை. இடிபோல் முழங்கும் வீர ஆரவாரம் குறையவில்லை. தோள் வலியும் குறையவில்லை. என்னதான் செய்கிறான் என்று பார்ப்போம்.

சந்தம்

தான தன்னன
தானன தானன
தா ன

வில்இ ழந்தனன்
என்னி னும், விழித்தவாள்
முகத் தின்
எல்இ ழந்திலன்,
வெங்கதம் இழந்திலன்,
இடிக் கும்
சொல்இ ழந்திலன்,
தோள்வலி இழந்திலன்,
சொரி யும்
கல்இ ழந்திலன்,
இழந்திலன் கறங்கெனத்
திரி தல்.

[விழித்தவாள் முகத்தின் எல் இழந்திலன்: ஒரே வீரப் பார்வையாய் விழிக்கும் கண்களோடு கூடிய சஞ்சலம் என்பது சற்றும் இல்லாத முகத்தின் காந்தியை இழக்கவில்லை: எல்: காந்தி; வெங்கதம்: பயங்கரமான கோபம்; சொரியும் கல் இழந்திலன்: வில் ஒடிந்து போனால் என்ன, அங்கே சிதறிக் கிடந்த பாறைக்கற்களை எடுத்து வீசுகிற காரியம் குறையவில்லை; இழந்திலன் கறங்கெனத் திரிதல்: கல்லுகளை எடுத்து வீசுவதற்காக நாலா பக்கமும் பம்பரம்போலச் சுற்றித் திரியும் காரியமும் குறையவில்லை, திரிசிராவுக்கு.

குறிப்பு:—அபூர்வமான பாவ உருவம் பெற்ற செய்யுள் இது. கவிஞர் திரிசிராவின் வீரத்தையும் வீரச் செயலையும் பார்த்துக் கூத்தாடுகிறார். அந்தக் கூத்தாட்டம் செய்யுளின் தாள உருவத்திலேக் கிடக்கிறது. செய்யுள், திரும்பத் திரும்பப் பாடி அனுபவிக்க வேண்டிய அபூர்வமான செய்யுள்.]

ஜால வித்தைகள் பல உண்டு; அவைகளில் ஒன்று: ஒருவனே வேலை செய்வான், ஆனால் ஏதோ இருநூறு பேர் ஆகாயத்திலிருந்து அம்புகளை மேலும் மேலும் தொடுத்துக் கொண்டிருப்பதாகத் தோன்றும். இத்தகைய மாயா ஜால வித்தைபோல் இருந்தது திரிசிராவின் போர்.

அவனுக்கு என்ன நேர்ந்தது என்று பார்ப்போம்.

ஆன்இ ரண்டுநா(று)
உளஎன அந்தரத்(து)
ஒரு வன்
மூன்இ ரும்பெரு
மாயையின், செருமுயல்
வா னைத்
தாள்இ ரண்டையும்
இரண்டுவெம் கணைகளால்த்
தடிந் து,—
தோள்இ ரண்டையும்
இரண்டுவெம் கணைகளால்த்
தடிந் தான்

[ஆன் இரண்டு நூறு உள என அந்தரத்து: அந்தரத்தில் வீரர்கள் இருநூறு பேர் இருக்கிறார்கள் என்று தோன்றும்படியாக; ஒருவன் மூன் இரும் பெரு மாயையின்: ஒருவனே மேல் மேலாகச் செய்யும் மாயப் போர் போல; செரு முயல்வானை: யுத்தம் செய்யும் திரிசிராவை: தாள் இரண்டையும் இரண்டு வெம் கணைகளால் தடிந்து: கால் இரண்டையும் இரண்டு அம்புகளால் அறுத்து—சரி, கறங்கு போலத் திரிதல் நின்றுவிட்டது. ஆனாலும் கல்லை எடுத்து வீசுவது நிற்கவில்லை. அதற்காகக் கணக்குப் பார்த்து வேறு இரண்டு அம்புகளை ஏவினான். அவை போய்த் தோள் இரண்டையும் துணித்து விட்டன.

குறிப்பு:—இரண்டு காலுக்கு இரண்டு அம்புகள்; கணக்கு சரிதான். பிறகு, தோள் இரண்டு இருக்கின்றனவே. அவைகளுக்கும் தனித்தனியே போய் வேலை செய்வதற்காக இரண்டு அம்புகளை ஏவினான். தோளும் ஒன்று விழுந்தது. அடுத்தாற்போல் இரண்டாவதும் விழுந்தது!

இதில் ஹாஸ்யம், எக்களிப்பு, வீரம் ஆகிய ரஸங்கள் ஒன்றாய்ச் சேர்ந்து தொனிக்கின்றன. அம்பு எய்வதன் சதுரப் பாட்டை வெகு அலங்காரமாய் எடுத்துக் காட்டியிருக்கிறது.]

திரிசிராவுக்குக் கால் போய் விட்டது. தோளும் போய்விட்டது. ஒன்றும் செய்ய இயல வில்லை. ஆனாலும் ஆங்காரமும் கொதிப்பும் விட்ட பாடாக இல்லை, வாயைத் திறந்த வண்ணமாய்ப் பெரிய பற்களை யெல்லாம் தெரியும்படியாகக் காட்டிக் கொண்டு, ஓடி வந்து ராமனைக் கடித்து விட ஆத்திரப் படுகிறான்.

இந்த ஆத்திரத்தைப் பார்த்தான் ராமன். இரக்கமே பிறந்து விட்டது அவனுக்கு.

அற்ற தாளொடு
தோளினன், அயில்எயி(று)
இலங் கப்
பொற்றை மாமுழைப்
புரைஉடை வாயினன்,
புகுந் து
பற்ற ஆதரிப்
பான்தனை நோக்கினன்:
பரி யா
கொற்ற வார்சிலைச்
சரங்கொடு தலையையும்
குறைத் தான்

[அற்ற தாளொடு தோளினன்: காலும் தோளும் அற்றுப் போனவனாய்; அயில் எயிறு இலங்க: வேல்போலும் பற்கள் வரிசையாய்ப் பிரகாசிக்க; பொற்றை மாமுழை: குன்றிலுள்ள ஒரு குகைபோன்ற; புரை உடை வாயினன்: மாமிசம் தின்று பழகிய அகன்ற வாயைக் கொண்டவனாய்; புகுந்து பற்ற ஆதரிப்பான்தனை: ஓடிவந்து தன்னைக் கடிக்க ஆத்திரப்படும் அரக்கனை; நோக்கினன்: பார்த்தான் ராமன்: பரியா: அடாடா, எவ்வளவு கஷ்டப் படுகிறான், எவ்வளவு ஆத்திரப் படுகிறான் என்று மனமிரங்கியவனாய்; பரியா: பரிந்து; கொற்றவார் சிலைச் சரங்கொடு: குறி தவறாத பெரிய வில்லில் ஏற்றிய அம்பு ஒன்றைக் கொண்டு; தலையையும் குறைத்தான்: தலையையும் அறுத்துத் தள்ளினான்.]

திரிசிரா அரக்கனாக இருந்தாலும் அவனுடைய வீரத்தனத்தைப் பாராட்டாமலிருக்க முடியவில்லை ராமனுக்கு. வீரம் என்பது ஒரு கலை. மிக அரிய கலை. அந்தக் கலையின் அற்புதமான லாகவங்களை (அம்பு தொடுப்பதையும் கல்லுகளை எடுத்து வீசுவதையும்) பார்த்து ராமன் அனுபவித்து விட்டான். அது காரணமாக உண்மையான அனுதாபம் திரிசிராவின் மேல் ஏற்பட்டு விட்டது. என்ன செய்கிறது: அவனுடைய வேதனை யெல்லாம் உயிர் நீங்கினால்தானே தீரும்?

தீர்த்தும் விடுகிறது!





# புத்திசாலிப் பெண்

டி. நடராஜன்

ஒரே ஒரு ஊரில் ஒரு ராஜா இருந் ான். அவன் பெயர் ராஜேந்திரன். வனுக்கு மூன்று பெண்கள் இருந் ார்கள். ஒரு நாள் அவன் முதல் பண்ணிடம் போய், "நீ என்னை ப்படி நேசிக்கிறாய்?" என்று கேட் ான். அதற்கு அவள், "நான் ங்களைத் தேன் போல் நேசிக் றேன்!" என்று சொன்னாள்.

பிறகு இரண்டாவது பெண்ணிடம் பாய், "நீ என்னை எப்படி நேசிக் றாய்?" என்று கேட்டான். அதற்கு வள், "நான் சர்க்கரையைப் போல் ங்களை நேசிக்கிறேன்!" என்று சான்னாள்.

கடைசியில் தன் மூன்றாவது குமாரி டம் போய், "நீ என்னை எப்படி நசிக்கிறாய்?" என்று கேட்டான். தற்கு அவள், "நான் உங்களை ப்பைப் போல் நேசிக்கிறேன்!" ன்று சொன்னாள்.

அப்படிச் சொன்னவுடன் ராஜா க்கு ரொம்பக் கோபம் வந்து விட் து. அந்தச் சமயமே அவளை அரண் னையை விட்டு வெளியே துரத்தி ிட்டான்.

பாவம்! ராஜாவின் கடைசிப் பெண் ஊராகச் சுற்றினாள். அவளால் ி தாங்க முடியவில்லை. ஒரு மரத் டியில் படுத்துத் தூங்கிவிட்டாள்.

அந்த ஊர் அரசன் வேட்டையாட ந்த வழியாக வந்தான். ஒரு பெண் ரத்தடியில் படுத்திருப்பதைப் பார்த் ான். அவளை அவனுக்கு ரொம்பவும் டித்து விட்டது. காவற்காரர்களை ட்டு அந்தப் பெண்ணை அழைத்து ந்து கல்யாணம் செய்துகொண்டான்.

சில வருஷங் ள் சென்றன. ாஜேந்திரன் ஒரு ான் வேட்டைக் ப்போனான். வழி ப்பித் தனியே வகு தூரம் சென்று விட்டான். அவனுக்கு ரொம்பவும் பயமாய்ப் போய்விட்டது.

அந்தச் சமயத்தில் பத்துப்பேர் ராஜாவின் பக்கத்தில் வந்தார்கள். அவர்கள், "இந்த ஊர் ராஜா உங்களை அரண்மனைக்கு அழைத்து வர எங்களை அனுப்பினார்!" என்று ராஜேந்திர ராஜாவை அழைத்துச் சென்றார்கள்.

களைப்பின் மிகுதியால் ராஜேந்திர ராஜாவுக்கு ரொம்பவும் பசியாக இருந்தது. அப்பொழுது ராணி ஒரு தட்டு நிறைய லட்டுகளாகக் கொண்டு வந்து கொடுத்தாள். தோழி ஒருத்தி, ஒரு பெரிய கிண்ணத்தில் தேனும், இன்னொரு பெரிய கிண்ணத்தில் சர்க்கரையும கொண்டு வந்து வைத்தாள். எல்லாம் ஒரே இனிப்பா யிருந்ததால் ராஜாவுக்குச் சாப்பிட முடியவில்லை.

ராஜா திரு திருவென்று முழித்தார். பின் ஒருவாறு மனதைச் சமாதானப் படுத்திக் கொண்டு, "ஏதாவது உப்பிட்ட பதார்த்தம் இல்லையா?" என்று கேட்டார்.

அப்பொழுது ராணி, "அப்பா! உப்புத்தான் உங்களுக்குச் சுத்தமாய்ப் பிடிக்காதே! தேனும், சர்க்கரையும்தானே பிடிக்கும்! பிடித்ததைச் சாப்பிடுங்கள்!" என்று சொன்னாள்.

முன் யோசனை இல்லாத ராஜேந்திரனுக்கு விஷயம் விளங்கிற்று. அந்த ராணி தன் மகள்தான் என்று தெரிந்து கொண்டான்.

"உப்பின் உபயோகம் எவ்வளவு பெரியது!" என்று தானே சொல்லிக்கொண்டு வியந்தான். ஊருக்குப் போனதும் புத்திசாலியான மகளுக்கு நிறைய நிறையப் பரிசுகள் அனுப்பி வைத்தான்.



அன்று முதல் அந்த ராஜா எதையும் நிதானமாக யோசித்துச் செய்தான்.

# ஒரு சிறு தவறு

பஞ்சு

மேஜையிலிருந்த புஸ்தகத்தை மூடி வைத்து விட்டுத் தலை நிமிர்ந்தேன். முன் பின் அறிமுகமில்லாத ஒரு பேர்வழி தடபுடலாய் உள்ளே நுழைந்தார். வெகு நாள் பழக்கமுடையவர்போல் என் அருகில் நின்று கொண்டு ஒரு கனைப்புக் கனைத்துக் கொண்டார். பிறகு சுற்று முற்றும் பார்த்து விட்டு, "சுவர்களில் வெடிப்பு விழுந்திருக்கிறது; அதை ஏன் ரிப்பேர் செய்யவில்லை?" என்று ஒரு கேள்வி போட்டார்.

நான் திகைத்துப் போனேன். அவர் ஏன் அப்படிக் கேட்க வேண்டும்?

"பழங்காலத்து வீடு! கூரையில் சிலந்திப் பூச்சிக் கூடுகள்; ஓட்டடை அடித்து முதலில் ரிப்பேர் செய்ய வேண்டும் போலிருக்கிறதே!" என்றார் மறுபடியும்.

ஆசாமிக்கு அரைப் பைத்தியமோ என்ற சந்தேகம் ஏற்பட்டது எனக்கு.

மறுபடியும் அவர், "வீடு மழை காலத்தில் ஒழுகும் போலிருக்கிறது. வெகு நாளாக அடைத்துக் கிடந்த வீடு போலிருக்கிறது. ஓடு கண்டிப்பாக மாற்றியாகத்தான் வேண்டும்!" என்று சொல்லி அண்ணாந்து பார்த்தார்.

"நான் கோபத்துடன், வீடு எப்படி இருந்தால் உமக்கு என்ன, ஐயா?" என்று கர்ஜித்தேன். அவர் லட்சியம் செய்யவில்லை.

"மாடியில் எத்தனை அறைகள் இருக்கின்றன?" என்று மறுபடியும் கேட்டார். வந்த கோபத்தில் இரண்டு அறை கொடுத்தனுப்பலாமா என்று யோசித்தேன். பிறகு ஆசாமி ஒரு வேளை பைத்தியமாக இருக்கலாமே என்ற சந்தேகம் மனதில் உதித்தது. அந்த யோசனையைக் கைவிட்டேன்.

"வீட்டில் குழாயா, அல்லது கிணறு தண்ணீர் எப்படி? சதா காலமும் தண்ணீர் வருமா? குடிக்கலாமா? பருப்பு நன்கு வேகுமா? எத்தனை ஜன்னல்கள்? எவ்வளவு கதவுகள்? வெளிச்சத்திற்கு ஒரு வித குறைவும் இல்லையே!" என்று மூச்சு விடாமல் கேட்டார்.

என் மூளை குழம்ப ஆரம்பித்தது.

"இந்தத் தெருவில் திருடர் பயம் உண்டோ?" என்றார்.

"நீர் என்ன, ஸி. ஐ.டி. இன்ஸ்பெக்டரா?" என்று கேட்டேன்.

"வீட்டில் எத்தனை பேர் குடியிருக்கலாம்?" என்றார்.

"ஸென்ஸஸ் கணக்கெடுக்க நீர் வந்திருக்கிறீரா?" என்றேன்.

"புகைப் போக்கியில் ஏன் இவ்வளவு கரி அடைந்திருக்கிறது? நெருப்புப் பயம் ஏதாவது உண்டோ?" என்றார்.



ஓட்டல் முதலாளி (தனது பழைய நண்பரைக் கண்டுவிட்டு):—அடேடே! வாப்பா வா: நம்ம ஓட்டலில் ஒரு அரை கப் காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம். வா, சொல்கிறேன். இல்லாவிட்டால் உன்னை விடமாட்டேன்!

ஒருவேளை இன்ஷ்யூரன்ஸ் ஏஜண்டோ ன்று சந்தேகித்தேன்.

"சாக்கடை நினர்தோறும் சரியாகச் த்தம் செய்யப்படுகிறதா?" என்றார் மறு டியும்.

சில நாட்களாக ஊரில் தொத்து நோய் ரவி வருகிறது என்ற சமாசாரம் நாபகத்திற்கு வந்தது.

"நீர் என்ன, அம்மை குத்துபவரா?" ன்று ஆத்திரத்துடன் கேட்டேன்.

"சீமை எண்ணெய் விளக்கு கண்ணுக்குக் கடுதல்; எலெக்டிரிக் விளக்குகள் ரொம்ப காயமாய்க் கிடைக்கும் போலிருக்கிறதே!" ன்றார்.

ஒரு சமயம் அவர் 'எலெக்டிரிக் வயரிங் ண்ட்ராக்ட்'ரா யிருக்கலாமோ வென்று ண்ணி, அவரை ஏற இறங்கப் பார்த்தேன்.

"குழாய்த் தண்ணீருக்கு வரி உண்டா? ிரமென்று குழாயில் ஜலம் நின்று விட்டால் லத்திற்கு என்ன செய்வது? ஜெனறு வெட்டுவதற்குக் கொஞ்சம் காலி இடம் இருக்கிறதா?" என்று மறுபடியும் கேள்வி ணைகளைப் போட்டுக் கொண்டே போனார்.

**எ**னக்கு ஆத்திரம் தாங்க வில்லை. வருக்குச் சரியான பாடம் கற்பிக்க வண்டு மென்று எண்ணினேன். உடனே, அந்த ஆசாமி மீது ஒரு தாவு தாவிப் பாய்ந் தேன். அவர் தெருவுக்குப் பாய்ந்தோடினார்.

இந்த வேடிக்கையைக் காண அடுத்த ிமிஷத்திற்குள் தெருவில் பெருங்கூட்டம் டிவிட்டது. அகஸ்மாத்தாக ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் இருபது ஜவான்களுடன் என் தெருவிற்கு வந்து கொண்டிருந்தார். கூட்டத்தைக் கண்டதும் எல்லோரையும் விரட்டிவிட்டு நடந்த விஷயத்தை விசாரிக்க ஆரம்பித்தார். நான் நடந்தவற்றை யெல் லாம் ஒன்று விடாமல் சொன்னேன். அந்த ஆசாமி இன்ஸ்பெக்டரிடம் என் வீட்டில் தொங்கிய "இந்த வீடு விற்கப் படும்" என்ற விளம்பரப் பலகையைச் சுட்டிக் காட்டினார். அப்பொழுதுதான் எனக்கும் இன்ஸ்பெக்டருக்கும் உண்மை விளங்கிற்று.



"ஓய்! நீர் எப்பொழுது இந்த வீட்டைக் கிரயத்திற்கு வாங்கினீர்?" என்று கேட் டார் இன்ஸ்பெக்டர்.

"இன்னும் இரண்டு நாள்கூட ஆக வில்லை!" என்றேன் நான்.

"நீர் சீக்கிரம் ஓடிப்போய் உம் வீட்டில் தொங்கும் அந்த 'வீடு விற்கப்படும்' என்ற விளம்பர போர்டை எடுத்தெறிந்து விட்டு வாரும். அதுதான் இவ்வளவு ரகம் நடந்த கலாட்டாவிற்குக் காரணம்!" என்றார். அப் போது பார்க்க வேண்டுமே, எங்கள் இருவருடைய முகத்தையும்!







நண்பன்:—என்னை விட்டுடப்பா, தொந்தரவு செய்யாதே! இன்னொரு சமயம் பார்த்துக்கலாம். விடமாட்டாயா? வந்துதான் ஆகணுமா? சரி;......
முதலாளி:—என்னப்பா, அரை கப் காப்பி சாப்பிட்டுவிட்டு ஒரு அணா கொடுத் துட்டுப் போறதுக்கு இத்தனை பிகு பண்ணிக்கொண்டாயே!

# அது ஒரு காலம்!

எம். எஸ். வி.

உஷ்! அப்பாடா! என்ன வெய்யில், என்ன வெய்யில்! தினம் தினம் ஆபீஸுக்குப் போய்க் களைத்து வேலை செய்துவிட்டு வரும் நமக்கு இந்தக் கோடையில் எங்கேயாவது குளிர்ச்சியான ஒரு இடத்தில் போய்த் தங்கி விட்டு வரலாமா என்று தோன்றுகிறது.

பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளெல்லாரும் இரண்டு மாத விடுமுறையில் ஊரைப் பார்த்து மூட்டை கட்டுகிறார்கள். அவர்களை எல்லாம் பார்க்கும்போது நம்முடைய ஆசை இன்னும் அதிகரிக்கிறது!

நாம் ஒரு காலத்தில் இளம் மாணாக்கர்களாயிருந்ததையும் 'ஹிஸ்டரி' வகுப்புக்கு 'மட்டம்' போட்டு விட்டு ஸினிமா பார்க்க 'மெட்டினிக்கு'ப் போனதையும் நினைத்துக் குதூகலப் படுகிறோம். பள்ளி வாழ்க்கையை எண்ணி எண்ணி மகிழ்ச்சி அடைகிறோம்.

இந்த ஆபீஸ் தொல்லைகளையெல்லாம் விட்டு விட்டு பழையபடி மாணாக்கனாகி விடலாமா என்று கூடத் தோன்றுகிறது அல்லவா!

ஆனால், வாஸ்தவமாகவே பள்ளிக்கூட வாழ்க்கை அத்தனை குதூகலம் நிறைந்த வாழ்க்கைதானா? ஒரு தடவை மறுபடியும் பள்ளிக் கூடத்துக்குள் நுழைந்து பார்த்தால்தான் அதன் கஷ்டம் தெரியும். என்ன? போய்ப் பார்க்கலாமென்று சொல்கிறீர்கள்? அப்படியானால் என்னோடு வாருங்கள். நம்முடைய பழைய பள்ளிக்கூடத்துக்குள் நுழைந்து பார்க்கலாம்.

உம், சீக்கிரம்; மணி 10 அடிக்கப் போகிறது. ஓடி வாருங்கள். இது கூட ஆபீஸ் அல்ல, லேட்டாய்ப் போகலாம் என்பதற்கு! பள்ளிக்கூடத்துக்கு அரை மணி லேட்டாய்ப் போனால் என்ன ஆகும் என்பது தெரியுமல்லவா?

வாத்தியார் கையில் பிரம்புடன் வந்து உங்களை விசாரிப்பார். பிறகு பெஞ்சு மேல் நிற்க வைப்பார். ஜாக்கிரதை!

இதோ பள்ளிக்கூட வாசலுக்கு வந்து விட்டோம். அடேடே! இது என்ன கூத்து? உங்கள் தலைமேல் இருக்கும் தலைப் பாகையைக் கழற்றி அப்பால் எறியுங்கள். இது ஆபீஸ் அல்ல, ஐயா!

ஆபீஸில்தான் நீங்கள் தலைப்பாகையை வைத்துக்கொள்ளலாம். இங்கே அது வாத்தியார்களுக்குத்தான் உரியது.

பேசாமல் பெஞ்சு மீது வந்து உட்காருங்கள். உஷ்! அதோ நம்முடைய கணக்கு வாத்தியார் வந்துவிட்டார். இப்போது கணக்கு வகுப்பு ஆரம்பமாகப் போகிறது. என்ன? கணக்கெல்லாம் மறந்து போச்சா? 'பிராக்ஷன்', 'டெஸிமல்', 'ஜியாமெட்ரி' இதெல்லாம் ஒன்றுமே ஞாபகத்தில் இல்லையா? சரி; வாத்தியார் கொடுக்கும் கணக்கையாவது போடத் தெரிகிறதா, பாருங்கள்.

"Aயும் Bயும் சேர்ந்து ஒரு கிணறு வெட்ட 33 நாட்கள் ஆகின்றன. Bயும் Cயும் சேர்ந்து வெட்டினால் 34 நாட்கள் ஆகின்றன. A.B.C. மூவரும் சேர்ந்து வெட்டினால் எத்தனை நாட்கள் ஆகும்?"

என்ன முழிக்கிறீர்கள்! தெரியாதா? பின் எப்படி ஐயா பி. ஏ. பாஸ் செய்து விட்டு உத்தியோகத்துக்குப் போனீர்கள்?

ஆபீஸில் இதுமாதிரி கணக்குப் போட வேண்டியிருந்தால் என்ன செய்வீர்கள்? குமாஸ்தாவைக் கூப்பிட்டுப் போடச் சொல்வீர்களா? பேஷ்! ஆனால் இது பள்ளிக்கூடம்; உங்கள் கணக்கை நீங்களேதான் போட்டுத் தொலைக்க வேண்டும்! சரி, மணிச் சத்தம் கேட்கிறது. கணக்குப் 'பீரியட்' முடிந்து விட்டது. 'ஜாக்ரபி' வாத்தியார் வருகிறார்; அட கஷ்டமே! ஏதாவது ஞாபகம் இருக்கிறதா! தென் அமெரிக்காவில் என்னென்ன நதிகள் ஓடுகின்றன என்று தெரியுமா? அதுவும் தெரியாதா? நாசமாய்ப் போச்சு; வாத்தியார் சொல்லிக் கொடுப்பார். அதையாவது தூங்காமல் கேட்டுக் கொண்டிருங்கள். இது ஆபீஸ் அல்ல, தூங்குவதற்குக்கூட!

இப்போது பூகோளமும் முடிந்து விட்டது. இன்னும் பத்து நிமிஷத்துக்குள் வாத்தியாருக்கு இந்தியா 'மேப்' ஒன்று போட்டுக் காட்டவேண்டும். காப்பியடிக்கக் கூடாது. ஐயா, ஐயா! உங்களைத்தான் ஏன் பள்ளிக்கூடத்திலிருந்து எழுந்து ஓடுகிறீர்கள்?

பள்ளி வாழ்க்கை பிடிக்கவில்லையா? ரொம்பக் கஷ்டமாயிருக்கிறதா? ஐயோ பாவம்! அதனால்தான் நான் அப்போதே சொன்னேன், பள்ளிக்கூடத்துக்குள் போய்ப் பார்த்தால்தான் அதன் கஷ்டம் தெரியும். இப்போது தெரிகிறதா, ஆபீஸ் வேலையே மேல் என்று?

